

நன்கொடை ரூ. 18.00

# அகஸ்திய மாமுனிவர்

அருளிய

# வைத்திய சதகம்

(கருத்துரையுடன்)

[illegible] பதிப்பகம் திருச்சி

அருள்

# அகஸ்திய மாமுனிவர்

அருளிய

# வைத்திய சதகம்

கருத்துரை :
டாக்டர். K. சிங்காரவேலு

சாதனா பதிப்பகம்
56, இராதாகிருஷ்ணன் தெரு,
ஆனந்த் நகர், திருச்சி - 21.

சாதனா வெளியீடு 2
முதல் பதிப்பு : டிசம்பர் - 1998

## நூலைப் பற்றி



| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | அகஸ்திய மாமுனிவர் அருளிய வைத்திய சதகம் |
| உரை ஆசிரியர் | : | டாக்டர். K.. சிங்காரவேலு |
| வெளியிட்டோர் | : | சாதனா பதிப்பகம் 56, இராதாகிருஷ்ணன் தெரு, ஆனந்த் நகர், திருச்சி - 21. |
| நூல் வடிவம் | : | 18.2 செ.மீ X 12.2 செ.மீ. |
| அச்சுத்தாள் | : | 18.6 மேப்லித்தோ |
| அட்டை | : | 10.2 சேசாயி போர்டு |
| எழுத்துக்கள் | : | 12 புள்ளி |
| மொத்த பக்கங்கள் | : | 52 |
| பிரதிகள் | : | 1000 |
| பைண்டிங் | : | சென்டர் பின்னிங் |
| அச்சிட்டோர் | : | சாதனா பதிப்பகம் 56, இராதாகிருஷ்ணன் தெரு, ஆனந்த் நகர், திருச்சி - 21. |







அருள்



அருட்குரு. **சிவராஜயோகி**

**4-ஆம்** ஆண்டு குருபூஜை விழா நினைவாக்
இந்நூலை சமர்ப்பிக்கின்றோம்.

# அணிந்துரை



Dr. P.S. குழந்தைவேலு R.I.M.P., R.H.M.P.,
தலைவர், திருச்சிராப்பள்ளி மாவட்ட
சித்தமருத்துவர்கள் சங்கம், திருச்சி.

காலவரையறைக்குள் கட்டுப்படாதவர்கள் சித்தர்கள். மனிதகுலம் உய்தற் பொருட்டு அவர்கள் அளித்திருக்கும் கொடைதான் ஞான--வைத்திய நூல்கள். பெரும்பாலும் எளிய நடையில் செய்யுள் யாத்திருப்பது போலத் தோன்றினாலும் சூட்சுமமான மறை பொருளை பொதித்து வைப்பது சித்தர்களின் போக்கு.

சித்தர்களின் வரலாறும் வரையறுத்துக் கூறுதற்கியலாது. காரணம் அவர்கள் மரணமிலாப் பெருவாழ்வைப் பெற்றவர்கள். பதினெண்சித்தர்களில் தலையானவராயும் முதலானவராயும் வழக்கத்தில் வைத்துப் போற்றப்படுபவர் அகத்தியர். சற்குருவாகிய சுப்ரமணியரின் திருவருளால் அகத்தியர் நமக்கு அளித்திருப்பது இந்த சதகம்.

வைத்தியர்களுக்கு மட்டுமன்று இந்நூல், ஞானத்தை நாடுபவர்களுக்கும் சிறந்த திறவுகோலாகும். இந்நூலுக்கு உரை எழுதிப் பதிப்பிக்க அன்பர்கள் மேற்கொண்ட முயற்சி பாராட்டுதற் குரியது. எளிய நடையில் மூலநூலின் கருத்து சிதையாவன்னம் கவனமாக சிரத்தையுடன் உரை வரைந்திருப்பது போற்றுதற்குரியது.

காப்புச் செய்யுளுக்கு அளித்திருக்கும் உரையே நூல் முழுமைக்கும் அளித்திருக்கும் உரைக்கு நற்சான்று அளிப்பதுபோல் அமைந்துள்ளது.

தத்துவ விளக்கம், இறுதியில் நாடி நிதானம் ஆகிய இடங்களில் மிகவும் கவனமாகச் சொற்களைக் கையாண்டிருப்பது புலப்படுகிறது.

நாடியறிந்தோன் நமனை அறிந்தோனாவான் என்பதற்கேற்ப பஞ்சபூத தத்துவங்கள், மரணக்குறி முதலானவற்றிற்குச் சிறந்த முறையில் உரை வரைந்துள்ளார். சித்தர்களின் குரு நூலாகிய இந்நூல் வைத்தியம் பயில முனைவோருக்கு அவசியமும் அடிப்படையுமாகும்.

வைத்தியர்கள் மட்டுமன்றி எல்லோரும் புரிந்து கொள்ளும்வன்னம் உரை வந்திருக்கின்றது. எல்லோரும் நூற்பயன் பெற்றுய்ய வாழ்த்துகிறேன்.

அன்பன்

P.S. *குழந்தைவேலு*





அருள்

# பதிப்புரை

அகஸ்திய மாமுனிவர் அருளிய வைத்திய சதகம் எனும் இந்நூல் சித்த வைத்தியத் துறையில் உள்ள பலருக்கும் பரிட்சார்த்தமானதுதான். எனினும் தற்போது சித்த வைத்தியம் கற்க முன் வருபவர்களுக்கு இந்நூல் அரிச்சுவடி போன்றது. எனவே பாடல் வடிவில் இருந்த இக்காவியத்தை எளிதில் புரிந்து பயன்பெறும் பொருட்டு கருத்துரையுடன் வெளிக்கொணர வேண்டும் என ஆவலுற்றோம்.

எமது ஆவலை புரிந்து தாமே முன் வந்து அனைவரும் புரிந்து கொள்ளும் வன்னம் எளிய தமிழில் கரு மாறாமல் பாடலுக்கு உரையெழுதி நம் பண்டைய சித்தர்களின் கருத்துக்கள் மறைந்து விட கூடாது என உயரிய நோக்குடன் எந்த கைமாறும் கருதாமல் உதவிய பாரம்பரிய சித்த வைத்தியர் டாக்டர். K. சிங்காரவேலு அவர்களுக்கு எமது நன்றியை தெரிவித்துக் கொள்கிறோம். இந்நூலுக்கு அணிந்துறை வழங்கி எங்களை ஊக்குவித்து ஆசீர்வதித்த மெய்ஞானத் தந்தை பரமேஷ்டகுரு பூவாளூர் குழந்தைவேல் சுவாமி அவர்களின் பாதம் தொட்டு நன்றியுடன் வணங்குகிறோம்.

அட்டைப்படம் வரைந்து தந்த அரசினர் கலைத்தொழில் கல்லூரி 4-ஆம் ஆண்டு வண்ண கலைத்துறை மாணவர் பாடாலூர் *M.* வேல்முருகன் அவர்களுக்கும் எமது நன்றியை தெரிவித்துக் கொள்கிறோம். சிறந்த முறையில் கணணி மூலம் அச்சு கோர்த்துக் கொடுத்த அன்பு நண்பர் லேசர் பாயிண்ட் நிறுவனர் *R.* நடராஜன் அவர்களுக்கும் சிறந்த முறையில் அச்சிட்டுக் கொடுத்த சாதனா பிரிண்ட் பாயிண்ட் நிறுவனத்தாருக்கும் எங்களது நன்றியை தெரிவித்து கொள்கிறோம். இந்நூலைப் பற்றி மேலான ஆலோசனைகளை வரவேற்கிறோம்.

E. தங்கமணி
சாதனா பதிப்பகம்

அருள்

# அகஸ்திய மாமுனிவர்

அருளிய

## வைத்திய சதகம்

காப்பு

அருவுருவா யரூபமுமா யடங்காத பொருளாகி அடங்கலாகி
அருவுருவா யண்டபகி ரண்டத்து உள்ளுமாய்ப் புறத்துமாய்
ஒருவுருவா யுயிர்க்குயிரா யுயிரில்நிறைந் தியங்கிநிற்கு மொப்பிலானே
கருவுருவாய் வைத்தியத்தின் சதகமிதை வழுத்தவுநீ காப்புத்தானே.

உருவமும், உருவமில்லாமலும், இரண்டு அல்லாத அரூபமாகவும், அடங்காத பொருளுமாகி, சர்வமும் வியாபித்தலும் ஆகி, உருவமும், உருவமில்லாத, இந்த பிரபஞ்சம் முழுவதும், பிரபஞ்சத்தின் உள்ளுமாகி, வெளியுமாகி, ஒரே உருவமாகி, உயிர்க்கு உயிராகி, அந்த உயிரில் நிறைந்து இயக்கத்தை செய்யும் ஈடுஇணை இல்லாதவனும், கருவின் உருவமும் ஆகி நின்ற இறைவா இந்த வைத்திய சதகத்தினை ஆக்கித்தர நீயே உறுதுணையாய் இருப்பாய்.

1 காப்பாகச் சிவமுடனே சத்தி கூடிக்
கருவான வாய்வங்கி தனையெ முப்பித்
தாப்பாக அனல்கூடி விளைந்து பொங்கி
சம்போக வேளையிலே சாடும் விந்து
நேர்ப்பாக அறுகுநுனிப் பனிபோல் வீழ்ந்து
நிறைந்தோங்கி உதானனங்கே காவ லாகிக்
கோப்பாக தசமாத வரையில் நின்று
குவலயத்தில் வீழ்ந்தாப்போல் வீழுந் தானே.

ஆணும் பெண்ணும் கூடி குலவி சம்போகம் செய்யும் வேளையில் வாய்வானது எழுந்து உஷ்ணத்தை எழசெய்து, அறுகு நுனிப் பனிபோல் பொங்கி விழும் விந்தானது உதான வாயு காவலோடு பத்து மாதம் வரையில் நின்று கருப்பையை விட்டு குழந்தை இந்த பூமியில் பிறக்கும்.

2 தானான வாயுவினாற் பிறந்து ஞானந்
தனைமறந்து கருமங்கள் தனக்கீ டாகத்
தானான வாதபித்த சேத்துமம் மூன்றாய்த்
தத்துவங்கள் தொண்ணூற்றா றாக வுண்டாய்த்
தானாக வியாதிநா லாயி ரத்துச்
சார்வாக நானூற்று நாற்பத் தெட்டுந்
தேனாக வளர்ந்தங்கே கருவி லுற்றுச்
செனித்தமுதல் மரிக்கும்வரை தழைக்கும் பாரே.

அப்படி பிறந்த குழந்தை ஞானம் என்ற இறைபேற்றினை மறந்து, கருமங்கள் நிறைந்து (அதாவது விட்ட குறை தொட்ட குறையின் காரணமாக) தனக்குத்தானே நேர்ந்த (பிணையாக அமைந்த) அந்த ஊழ்வினைப் பயனால், வாதம், பித்தம், சேத்துமம், இந்த மூன்றும், தத்துவங்கள் தொண்ணூற்றாறாகவும், நாலாயிரத்து நானூற்றி நாற்பத்தெட்டு வியாதிகளாகவும், கருவிலே அவரவர் ஊழ்வினைப் படி பிறந்தது முதல் இறக்கும் வரை அக்குழந்தையை தொடரும்.

3 பாரப்பா பூதமஞ்சு மண்ணீர்தேயு
பரிவாயு வாகாச மஞ்சி னாலே
சேரப்பா சடமாச்சு மண்ணின் கூறு
செறிமயிர்தோ லெலும்பிறைச்சி நரம்பஞ் சாகும்
நேரப்பா அப்புவின்கூ றுதிரம் மச்சை
நீர்மூளை சுக்கிலமோ டஞ்ச தாகும்
காரப்பா தீக்கூறு பயமாங் காரங்
கடுஞ்சோம்பு நித்திரைமை துனங்க ளஞ்சே.

பஞ்சபூதம் என்கின்ற மண், நீர், தேயு, வாயு, ஆகாயம் முதலானவற்றினால் இந்த தேகம் உண்டானது. மண்ணின் கூற்றால் சடமாச்சு, அதாவது மயிர், தோல், எலும்பு, இறைச்சி, நரம்பு எனவும். அப்புவின் கூற்றால் இரத்தம், மச்சை, நீர், மூளை, சுக்கிலமும், தீக்கூற்றினால் பயம், ஆங்காரம், கடும் சோம்பல், புணர்ச்சி, நித்திரை இன்மை போன்றவைகள் எனவும் ஐந்துகளாம்.

4 அஞ்சான வாயுவின்கூ றிருத்த லோடல்
அவைநடத்தல் கிடத்தலுடன் நிற்ற லஞ்சாம்
அஞ்சாகு மாகாசக் கூறு காமம்
அதிற்குரோத லோபமோக மதமஞ் சாகும்





பிஞ்சாரும் விழிமானே இவைக ளெல்லாம்
புறக்கருவி யிருபத்தஞ் செனவ குத்துத்
துஞ்சாத தத்துவங்கள் தொண்ணூற் றாறுஞ்
சொல்வதுகேள் பொறியஞ்சு தானுண் டாச்சே.

வாய்வின் கூறு இருத்தல், ஓடல், நடத்தல், கிடத்தல், நிற்றலாகும் ஆகாயத்தின் கூறு காமம் அதில் குரோதம், லோபம், மோகம், மதம் போன்றவையாம். இவைகள் எல்லாம் வெளியில் உள்ள கருவி இருபத்தைந்து என்று வகுத்து தத்துவங்கள் 96, பொறி 5 உண்டாச்சு.

5 உண்டான பொறியதுவே சோத்திரந் தொக்கு
உறுதியுள்ள சட்சுசிங் நுவைஆக் கிராணங்
கண்டாயோ செவியுடம்பு நயனம் நாக்கு
கந்தமுறு மூக்குமிவை தானஞ் சாகும்
விண்டாலோ புலனைந்து விள்ளக் கேளு
விரிந்தசத்த பரிசமுடன் ரூபர சகெந்தந்
திண்டாடுஞ் சத்தமது செவியிற் கேட்குந்
தேகமது சுகமறியும் பரிச மாமே.

சோத்திரம் - செவி, தொக்கு - உடம்பு, சட்சு - கண்கள், சிங்குவை - நாக்கு, ஆக்கிராணம் - மூக்கு என இவ்வைந்தும் ஞானேந்திரியக் காரியங்களாகிய, சப்தத்தைக் காதால் கேட்பதும், ஸ்பரிசத்தை உடம்பால் உணர்வதும், ரூபத்தை கண்களால் பார்ப்பதும், இரசம் என்ற சுவையை நாக்கால் அறிவதும், கந்தம் என்ற வாசனையை மூக்கால் முகருவதுமான தொழில்களை இவ்வுடலில் நடத்திக் கொண்டு இருக்கின்றன.

6 பரிசமுள்ள ரூபமெல்லாம் விழியிற் காட்டும்
பண்பான ரசமதுவே நாவிற் காட்டும்
பிரிசமுள்ள கெந்தம்நா சியினிற் காட்டும்
பேசிலுயிர்க் கூறுகன்ம யிந்திரி யந்தான்
வரிசையுட னஞ்சாகும் வாக்குப் பாதம்
வள்பாணி பாயுருவோ டுபத்த மஞ்சாம்
விரிவதற்கு வாக்குவாய் பாதங் காலாம்
வியன்பாணி கையாம்பா யுருக்கண் ணாமே.

அந்த உணர்ச்சி பூர்வமான உருவமெல்லாம் கண்களால் காணுவதும், ரசம் என்ற சுவையை நாவினால் சுவைப்பதும், கெந்தம் என்ற வாசனையை மூக்கால் நுகர்வதும், உயிர்கூறான கன்மயிந்திரியமானது வாக்கு, பாதம், பாணி, பாயுரு, உபத்தம் இந்த ஐந்தும் வாக்கு என்பது வாய், பாதம் என்பது கால், வியன்பாணி என்பது கை, பாயுரு என்பது கண் ஆகும்.

7 கண்ணான உபத்தமென் பதுவே லிங்கம்
கருதுமிவை யஞ்சாகும் ஞானேந் திரியம்
தண்ணான வஞ்சாகும் வசனங் கெமனந்
தானமொடு விசர்க்கமா னந்த மஞ்சு
ஒண்ணான வசனமது வார்த்தை வாய்க்கு
உயிர்க்கூறு கெமனம்நடை காலிற் றானும்
திண்ணான தானமென்றாற் கொடுக்க வாங்கச்
செய்யுமிரு கைக்குமுயிர்க் கூற தாமே.

கன்மயிந்திரியமான அபத்தம் என்பது லிங்கம் அதாவது ஆண் குறியை குறிக்கும். ஞானேந்திரியம் ஐந்து ஆகும். வசனம், கெமனம், தானம், விசர்க்கம், ஆனந்தம். இவையாவன வசனம் என்றால் வாயிலிருந்து வரும் வார்த்தையாகும். கெமனம் என்பது நடையாகும் (காலால் நடப்பது) தானம் என்பது பிறருக்கு கொடுப்பதும் வாங்குவதும் செய்யும் இரு கைகளும் ஆகும்.

8 கூறான விசர்க்கம தபான வாயிற்
கொழுகிமலம் விடுத்தலுயிர்க் கூறாமென்றும்
வீறான ஆனந்தம் லிங்கந் தன்னில்
மேவிநீர் விந்துவிடுங் கூறா மென்றும்
பேறான கரணமினி நான்கு கேளீர்
பெரியமனம் புத்தியாங் காரஞ் சித்தம்
வாறான மனம்நினைக்கும் புத்திவி சாரிக்கு
மாங்காரங் கொண்டெழுப்புஞ் சித்தமொன் றுவிக்கும்.

விசர்க்க தாபனமானது மலம் விடுத்தலையும், ஆனந்த மானதுஆண்குறி மூலம் போகிக்கும் போது அதாவது (Inter course period) பெண்ணுடன் கூடி குலவி இன்பம் பெறுதலை அந்த நேரத்தில் விடும் விந்து (சுரோணிதம்) விடுதலையே குறிக்கும். கரணம் நான்கையும் கூறும்போது மனம், புத்தி, அகங்காரம், சித்தம் என்பன





வாகும். மனமானது நினைக்கும் இடத்து புத்தி விசாரணை செய்யும், ஆங்காரங்கொண்டு இருக்கையில் சித்தத்தை எழுப்பும்.

9 ஒன்றானஅறிவொன்று அதனிற் கூடி
உள்ளமதைக் கண்டுமகிழ்ந் திருக்கு மென்றும்
நன்றான தத்துவத்திற் பூத மஞ்சு
நல்லபொறி யஞ்சுபுல னஞ்சி னோடு
கண்டாயோ ஞானயிந் திரிய மஞ்சு
கன்மயிந் திரியமஞ்சு கரணம் நான்கு
ஒன்றான வறிவோடே முப்ப தாச்சு
உத்தமனே தசவாய்வு பத்துங் கேளே.

அறிவானது முன்தோற்றுவித்த சித்தத்திலே கூடி உள்ளமதில் மகிழ்ச்சியை தோற்றுவிக்கும். தத்துவத்திலே பூதம் ஐந்து, பொறி ஐந்து, புலன் ஐந்து, ஞானயிந்திரியம் ஐந்து, கன்மயிந்திரியம் ஐந்து, கரணம் நான்கு, அறிவோடு முப்பது ஆகும் இனி தசவாய்வு என்ற பத்துவித வாய்வைப் பற்றிக் கேளுங்கள்.

10 பத்தான வாய்வுதான் பிராணனோ டபானன்
பதிவான வியானனோ டுதானன் சமானன்
சித்தான கூர்மனுடன் நாகன் கிரிகரன்
தேவதத்தன் னுடனேதனஞ் சயன்பத் தாகும்
வித்தான பிராணன்மூ லத்தைச் சேர்ந்து
மேனோக்கிச் சிரசில்முட்டி விழியின் கீழாய்த்
தெத்தாக நாசிவழி யோடுமீ ராறிற்
திரும்பியெட்டு முட்புகுந்து நால்வீண் போச்சே.

தசவாயுவானது பிராணன், அபானன், வியானன், உதானன், சமானன், கூர்மன், நாகன், கிரிகரன், தேவதத்தன், தனஞ்செயன் எனபத்தாகும். பிராணனானது மூலாதாரத்தைச் சேர்ந்து மேனோக்கி சிரசில் முட்டி அதாவது வாய்வானது லலாட மத்தியிலே தோன்றி சித்திர நாடி யிலே விழுந்து மூலாதாரத்தில் ஓம் என்று உதித்து, நாபிச் சக்கரத்திலே ரீம் என்று முட்டி இடகலை, பிங்கலைகளிலே ஓடி கபாலத்தைச் சுற்றி நாசியின் வழியாகப் புறப்பட்டு நான்கு விரற்கடைப் பிரமாணம் கழித்து எட்டு விரற்கடை பிரமாணம் மீண்டும் உட்சென்று பழைய இடத்திலேயே தாக்குகின்றது.

11 போச்சுதே கடிகையொன்றிற் சுவாசந் தானும்
புகழாக முன்னூற்று அறுப தாக
வாச்சுதே நாளொன்றுக் கிருபதோ ராயிரத்
தறுநூறு மூன்றிலொரு கூறு பாழாம்
ஆச்சுதே யிருந்தாக்கா லீரா றாகும்
அம்புவியின டைகொண்டாற் பதினா றாகும்
வாச்சுதே யோட்டமதி லாறஞ் சாகும்
வரிவிழிகண் துஞ்சில்முப் பத்தா றுவீணே.

இந்த விதம் நல்ல சுகதேகிக்கு நாழிகை ஒன்றுக்கு ( $2\frac{1}{2}$ நாழிகை - 1மணி) 360 சுவாசமாகக் கொல்லன் துருத்தியில், காற்று ஏறுவது போல் ஏறும். இவ்விதம் ஏறும் சுவாசமானது, இராப்பகலாகிய அறுபது நாழிகையுள்ள நாள் ஒன்றுக்கு 21600 சுவாசமாகின்றது. இவற்றில் 7200 சுவாசம் வெளிப்பட்டும் பாக்கி 14,400 சுவாசம் உள்ளும் அடங்கும். முன் சொல்லியபடி இருந்தால் பன்னிரண்டாகும். நடந்தால் பதினாறு ஆகும். ஓடினால் பதினொன்றாகும். கண்களை மூடித் தூங்கும் போது முப்பத்தாறாம்.

12 வீணப்பா பெண்போகத் தாலெண் ணஞ்சு
விறுதாவிற் போமதனால் நோயுண் டாகும்
தோணப்பா அபானனுந்திக் கீழே நின்று
சுகமாக மலசலத்தைக் கழித்து நிற்பன்
காணப்பா வியானன்பொருத் திடங்க ளெல்லாங்
களைப்புடனே தவனமுண் டாக்கி நிற்பன்
ஊணப்பா வுதானனுண்ட வசனந் தன்னை
உறுநரம்பி லூட்டியுடல் வளர்க்குந் தானே.

கெட்ட நடத்தையுள்ள பெண்களைக் கட்டித் தழுவியதால் நோய் உண்டாகும். தொப்புளுக்குக் கீழே நின்று சுகமாக மலசலத்தைக் கழித்து நிற்பான். அதாவது, குதத்திற்கும் குய்யத்திற்கும் நடுவில் நின்று தனக்குரிய கழிவுத் தொழிலாகிய மலமூத்திரம் இவைகளை வெளிக் கொணருவது அபானன் ஆகும். வியானன் தோளில் நின்று 72000 நரம்புகளில் சென்று நீட்டல், முடக்கல், பரிசம் இவைகளை செய்து அன்னசாரத்தை ஆங்காங்கே நிரப்பி, பித்தத்தை அதிகப்படாமல் அளவுடன் இருக்கும்படி செய்யும். உதானன் ஆனவன் பசி தீபனத்தை





எழுப்பி, அன்ன சாரத்தை சீரணிக்கச் செய்து நாடிகளில் செலுத்தி உடலை வளர்க்கும்.

13 வளர்க்குமந்தச் சமானன்வாய் வதற்குத் தானே
வழிகாட்டி மிஞ்சவொட்டா திருப்பன் கூர்மன்
விழிக்குள்நின் றொளிவாக்கி மயக்க மாக்கி
மிரட்டிமுழித் திடும்நாகன் தொண்டைக்கு னின்று
குளிக்கின்ற கபத்தோடு சேர்ந்து நெட்டி
கொட்டாவி விக்கலெனுங் கொடுமை செய்வன்
பளிக்குள்வருங் கிரிகரனு முடக்கல் நீட்டற்
பாங்கான அசைவுதனி னிற்பன் தானே.

சமானன் என்ற வாய்வுக்கு வழிகாட்டி மிஞ்சவொட்டாமல் இருப்பான். கூர்மன் சகலகலைகளை உணரவும், பார்க்கவும், கண் விழிக்கவும், உரோமம் சிலிர்க்கவும் செயல்படுகிறது. நாகன் என்பவன், தொண்டைக்குள் நின்று கபத்தோடு சேர்ந்து நெட்டி, கொட்டாவி, விக்கல், எல்லாம் செய்வான். கிரிகரன் முடக்கல், நீட்டல், அசைவுடன் நிற்பான்.

14 நிற்பானே தேவதத்தன் சத்தத் தோடே
நின்றுகுர லோசைசெய்து பெலன்கள் செய்வன்
மொய்ப்பான தனஞ்சயனுந் தேக மாண்டு
மூன்றாநாட் சிரம்வெடிக்கி லோடிப் போவான்
இப்பாற்கேள் நாடிபத்திடை யோடுபின் கலையும்
இதமான சுழிமுனையுஞ் சிங்குவை புருடன்
தப்பாத காந்தாரியத் தியலம் புடையுஞ்
சங்குனியூ டேகுகுவ னிவைபத் தாமே.

தேவதத்தனானவன் சப்தத்துடன் குரலை எழுப்பி ஓசை செய்து பெலன்கள் செய்வான். தனஞ்செயன் வாய்வானது நாசியிலிருந்து தேகமெல்லாம் ஓடி வீங்கச் செய்து, உடலை விட்டுப் பிராணன் சென்றபின் எல்லா வாய்வுகளும் உடலைவிட்டுப் போனப்பின்பு இந்த வாயு மாத்திரம் தலை வெடித்த பின் உடலை விட்டு நீங்கும். இதன் மேல் நாடி பத்தினை பற்றிக் கூறுவதாக இடகலை, பிங்கலை, சுழுமுனை, சிங்குவை, புருடன், காந்தாரி, அத்தி, அலம்புடை, சங்கினி, குகூ எனப் பத்து ஆகும்.

15 ஆங்காணு மிடைவலக்காற் பெருவிர லினின்று
அசைந்திளகி யிடநாசி யளவு பற்றும்
பாங்கான பின்கலைதா னிடது காலிற்
பெருவிரலில் நின்றிளகி வலநா சிபற்றுந்
தீங்கான சுழிமுனையும் பிராணவாய் வைசேர்ந்து
சிரசளவு முட்டித்திடஞ் செய்வா னங்கே
ஒங்காணுஞ் சிங்குவையுண் ணாக்கி னின்று
உண்டவன்னஞ் சாறமுற விழுங்குந் தானே.

இடகலை :- வலதுகால் பெருவிரலிலிருந்து கத்திரிக்கோல் போல மாறலாக இடது மூக்கைப் பற்றி நிற்பது.

பிங்கலை :- இடதுகால் பெருவிரலிலிருந்து கத்திரிக்கோல் போல மாறலாக வலது மூக்கைப் பற்றி நிற்பது.

சுழுமுனை :- மூலாதாரத்தைத் தொடர்ந்து எல்லா நாடிகளுக்கும் ஆதாரமாக (நடுநாடியாக) சிரசுவரை பற்றி நிற்பது.

சிங்குவை :- உண்ணாக்கில் நின்று அன்னம் தண்ணீர் இவைகளை விழுங்கச் செய்வது

16 தானமுள்ள புருடனுமே வலது கண்ணிற்
தானிருப்பன் காந்தாரி யிடது கண்ணில்
ஈனமற வத்திவலக் காதி ருப்பன்
இடக்காதி லலம்புடைதா னிசைந்தி ருப்பன்
ஆனலிங்கத் தளவுந்தான் சங்குனி யிருப்பன்
அபானத்திற் குகுவன்தா னடக்கமா யிருப்பன்
ஊனமறவா சயங்களைந்துஞ் சொல்லக் கேளு
ஒகோகோ அமாசயமும் பக்குவா சயமே.

புருடன் :- வலது கண்ணளவாய் நிற்பது

காந்தாரி :- இடது கண்ணளவாய் நிற்பது

அத்தி :- வலது காதளவாய் நிற்பது

அலம்புடை :- இடது கா தளவாய் நிற்பது

சங்குனி :- குறியின் அளவாய் நிற்பது

குகூ :- அபானத்தளவாய் நிற்பது.

சயங்களனைத்தும், அமாசயமும், பக்குவாசயமும் சொல்லக்கேளு.





17 சயமான மலாசயமுஞ் சலாசயத் தோடு
மிகுந்த சுக்கிலவா சயத்தோ டைந்து
பயமான அமாசயந்தா னன்னந் தண்ணீர்
பருகுமிடந் தன்னினிற் பன்பக் குவந்தான்
வயமான அன்னமொடு தண்ணீர் தானே
வகுத்திறங்கு மிடத்தினிற்பன் மலாச யந்தான்
தயவான மலஞ்சேரு மிடத்தி னிற்பன்
சலஞ்சேரு மிடஞ்சலா சயனிற் பானே.

மலாசயமும், சலாசயமும், சுக்கிலாசயமும் ஆக ஐந்து ஆசயங்களாம்.

அமாசயமானது :- அன்னம், தண்ணீர், பருகும் இடத்தில் நிற்பான்.

பக்குவாசயம் :- அன்னம், தண்ணீர், வகுத்து இறங்கும் இடத்தில் நிற்பான்.

மலாசயந்தான் :- மலஞ்சேருமிடத்தில் நிற்பான்

சலாசயம் :- ஜலஞ்சேருமிடமான மூத்திராதியை பற்றி நிற்பான்.

18 நிற்பானே சுக்கிலவா சயந்தான் விந்து
நிறைந்திருக்கு மிடத்தினிற்பன் கோச மைந்து
தப்பாத அன்னமயம் பிராணம யமென்றுஞ்
சார்வான மனோமயவிஞ் ஞானம யமென்றும்
நற்பான ஆனந்த மயமோ டைந்தாம்
நாடுமன்ன மயந்தனிற்பிரா ணமயந் தோன்றும்
ஒப்பான பிராணத்தில் மனோமயந் தோன்றும்
உண்டான மனத்தில்விஞ் ஞானமயமாமே.

சுக்கிலாசயம் :- விந்து நிறைந்து இருக்கும் இடத்தில் நிற்பான்.

கோசமைந்து :- அன்னமயம், பிராணமயம், மனோமயம், விஞ்ஞானமயம், ஆனந்தமயம், அன்னமயமதில் பிராணமயம் தோன்றும். பிராணத்தில் மனோமயம் தோன்றும் மனோமயத்தில் விஞ்ஞான மயம் தோன்றும்.

19 மயமான விஞ்ஞான மயத்திலா னந்த
மயந்தோன்றுந் தத்துவங்கள் முப்ப தாச்சு
செயமான முன்சொன்ன முப்ப தோடே
சேர்ந்ததப்பா அறுபதையுந் திறமாய்ப் பாரு

நயமான வாதார மாறுஞ் சொல்வேன்
நல்மூலா தாரமொடு சுவாதிட் டானந்
தயவான மணிபூரக மனாகதம் விசுத்தி
சார்வான ஆக்கினையோ டாறு மாமே.

விஞ்ஞானமயத்தில் ஆனந்தமயம் தோன்றும். தத்துவங்கள் முப்பது ஆகின்றன, முன்னால் சொல்லப்பட்ட முப்பதோடு சேர்ந்து அறுபதையும், திறமதாய் பார்த்தால் அதற்கு அப்பால் ஆதாரம் ஆறும் சொல்வேன். மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அனாகதம், விசுத்தி, ஆக்கினை ஆக ஆறும் ஆம்.

20 ஆறான மூலமது குய்யத் திற்கும்
அறிவான குதத்திற்கும் நடுவே யாச்சு
வீறான சுவாதிட்டா னந்தான் கேளு
வீணாத்தண் டுற்றவிடந் தானே யாச்சு
வாறான நாபியெனுங் கமலந் தானே
மணிபூர கஞ்சேர்ந்த விடமே யாச்சு
கூறான விருதயமாங் கமலந் தானே
கொழுத்தவனா கதமெனவே குறிக்க லாமே.

மூலாதாரமானது குய்யத்திற்கும், குதத்திற்கும் நடுவே ஆகும், சுவாதிட்டானம் தண்டு வடத்தைப் பற்றி நிற்கும், நாபியெனும் கமலம் மணிபூரகம் சேர்ந்த இடம் ஆகும், கமலம் அனாகதம் ஆகும்.

21 குறிப்பான விசுத்திகண்டத் தான மாகுங்
கூண்டபுரு வமையமாக் கினையே யாகும்
பிரிப்பான வாதார மாறுஞ் சொன்னோம்
பேறான மண்டலந்தான் மூன்றுங் கேளு
பொருப்பான அக்கினிமண் டலந்தா னொன்று
புகழான வாதித்தமண் டலந்தா னொன்று
முறிப்பான சந்திரமண் டலத்தி னோடே
மூன்றாச்சு அக்கினியு மூலத் தாச்சே.

விசுத்தி கண்டத்தானம் ஆகும். கண்ட புருவமே ஆக்கினையாகும். ஆதாரம் ஆறும் கூறுவதுடன், மண்டலம் மூன்றும் சொல்வோம். அவையாவன அக்கினி மண்டலம், ஆதித்த மண்டலம், சந்திர மண்டலம் ஆக மூன்று கூறலாயினர். அக்கினி மூலாதாரம் ஆகும்.





22 மூலமதி லக்கினிமண் டலந்தான் சேர்ந்து
முனிந்திளகி நாபிமட்டு முயர்ச்சி செய்வான்
சீலமுறு மாதித்தமண் டலந்தா னெஞ்சிற்
சேர்ந்துகண்டத் தானமட்டுந் திறமே செய்யும்
கோலமுறுஞ் சந்திரமண் டலந்தா னெற்றிக்
குறிப்பறிவை மலமூன்றுங் கூறக் கேளு
சாலவே யாணுவகா மியமு மாய்கை
தயவான ஆணுவத்தின் தகமை கேளே.

மூலமதில் அக்கினி மண்டலம் சேர்ந்து இளகி நாபி மட்டும் அதாவது தொப்பூள்வரை முயற்சி செய்வான். ஆதித்த மண்டலம் நெஞ்சில் சேர்ந்து கண்டம் (கழுத்து) மட்டும் திறமே செய்யும். சந்திர மண்டலமானது நெற்றியில் நிற்கும். மலம் மூன்றும் சொல்வேன் ஆணவம், காமியம், மாய்கை ஆகும். ஆணவத்தின் விபரம் சொல்வேன்.

23 ஆணுவந்தா னுடம்பை நானென் றிருக்கை
யருங்காமியங் கண்டதெல்லா மாசை கொள்ளல்
நீணுலகில் மாய்கையது தனக்கு வார
நிலைதானே யறியாமற் கோபங் கொள்ளல்
பூணுகின்ற தோடமூன் றதனைக் கேளு
புகழ்வாத பித்தசிலேற் பனமா மூன்றிற்
பேணுகின்ற வாதமது வாய்வின் கோபம்
பித்தமது அக்கினியின் கோபந் தானே.

ஆணவமலமானது நான் என்ற மமதையாகும். காமியமானது கண்டதையெல்லாம் ஆசை கொள்ளல், மாயையானது தன்னுடன் வராது என்ற நிலை ஆகும். மேலும் தோஷம் மூன்றினை சொல்வோம். அவையாவன வாதம், பித்தம், சிலேஷ்டமம் அல்லது கபம் எனவாம். வாதமானது வாய்வின் விகாரத்தையும், பித்தமானது நெருப்பின் விகாரத்தையும், கூறலாகும்.

24 கோபமுள்ள சிலேற்பனந்தா னப்பின் கோபங்
குணமூன்றுங் கோபமதாற் கொளுநோ யெல்லாந்
தாபமுறு மேடணைமூன் றத்னைக் கேளாய்
தாரயேடணை புத்திரயே டணைதா னென்றுஞ்

சோபவுல கேடணைதான் மூன்றுங் கேளு
சொல்லுந்தா ரயேடணைபெண் ணாசை யாதற்
தாபமுறும் புத்திரயே டணைதான் புத்திரர்
தனைத்தேடி யாசைகொள்ளற் றயவு கொண்டே.

சிலேற்பனம் தண்ணீரின் விகாரம் இவை மூன்றும் தத்தம் கோபத்தாலே நோய்கள் வந்து சம்பவிக்கும் அடுத்து ஏடணை மூன்றைக் கூறுவோம். அதாவது தாரயேடணை, புத்திரயேடணை, உலகேடணை மேலும் தாரயேடணை யென்றால் பெண்ணாசைக் கொண்டு தாபத்துடன் இருப்பதும், புத்திரயேடணை யென்றால் புத்திரர் அதாவது பிள்ளை (ஆண் அல்லது பெண் குழந்தையை) பற்றி நினைத்து ஆசை கொள்வது ஆம்.

25 கொண்டவுல கேடணைதா னுறவு கொள்ளிற்
கொள்வதற்கா சைகொள்ளற் குணமூன் றேகேள்
தண்டமிழோ ரறியுமிரா சததா மதமுஞ்
சாத்துவீக மூன்றினுட தகமை கேளாய்
கண்டபடி ராசதமாங் கார மாகிக்
காசினியி லமிர்த குணமா யிருப்பன்
உண்டிபெருத் திடுஞ்சோம்பு தாமதந் தானும்
உன்மத்த மதவெறியா யிருப்பன் தானே.

உலகேடணை யென்றால் உறவு கொள்ள ஆசைபடுவதாம், மேலும் குணம் மூன்றைப் பற்றிக் கூறுவோம். அதாவது ராசதம், தாமசமும், சாத்வீகமும் ஆகும். அதாவது ராசதம் என்றால் ஆங்காரம் கொண்ட குணம் (கோபம்) தாமஸம் என்றால் உண்டி பெருத்து, சோம்பலுடன், அமிர்த மயமான குணத்தோடும், பைத்தியம் பிடித்தவனைப் போல இருப்பான்.

26 தானமுள்ள சாத்துவீகங் குளிர்ந்த சொல்லாய்ச்
சகலருக்கு மமிர்த குணமா யிருக்கை
ஏனமுள்ள விகாரமெட்டுஞ் சொல்லக் கேளாய்
இயல்காமக் குரோதமுடன் லோப மோகம்
ஆனமத மாச்சரிய மிடும்பை வேகம்
ஆகவெட்டிற் காமம தாசை யாச்சு
ஈனமுறுங் குரோதமது பிணக்கு லோபம்
இயல்வான பிடிப்பாடு தானு மாச்சே.





சாத்வீக குணம் யாதெனில் மென்மையான நல்ல சொல்லை சொல்பவனுமாய், அமிர்தம் போன்ற குணத்தையும் பெற்று இருப்பான் எனவும், மேலும் விகாரம் எட்டையும் சொல்வோம். அவைகளாவன காமம், குரோதம், லோபம், மோகம், மதம், ஆச்சரியம், இடும்பை, வேகம் என்பது ஆகும். இதில் காமம் என்பது ஆசையாம். குரோதம் என்பதை பிணக்கு என்றும், லோபத்தை பிடிவாதமாகும் மென்றறிக.

27 ஆமிந்த மோகமது பிரிய மாச்சு
அடுத்தமத மாவதுவே கெருவ மாச்சு
ஓமிந்த மாச்சரியங் கூரமாச்சு
உறுமிடும்பை தானுமுதா சினமே யாச்சு
வேமந்த வேகமது கொடூரமாச்சு
வேறுஇரு வினையிரண்டும் விள்ளக் கேளு
தாமந்த நல்வினை தீ வினைதான் ரெண்டு
தயவான புண்ணியம்நல் வினைதா னாச்சே.

மோகமானது மனதுக்கு இஷ்டமானது, மதமாவது ஆணவமாச்சு (கர்வம்) ஆச்சரியம் பொறாமை ஆகிவிடும், துன்பமானது உதாசினமே ஆச்சு (ஒதுக்கித்தள்ளல்). வேகமானது கொடூரமாச்சு சண்டாளத்தைத் தூண்டி விடுதல் (கோபம்). இரு வினை இரண்டும் சொல்லக்கேளு. அதுவானது, நல்வினை, தீவினை என்று ஆகும். புண்ணியமானது நல் வினையாகும்.

28 புண்ணியமே யல்லீ வினையே பாவம்
புனிதமுறு மவத்தையஞ்சு சொல்லக் கேளு
திண்ணமுறுஞ் சாக்கிரஞ்சொப் பனஞ்சு ழுத்தி
சேர்ந்ததுரி யந்துரியா தீதத் தினோடு
வண்ணமுறுமுஞ் சாக்கிரமேல் லலாடத் தானம்
வரும்பெரிய சொப்பனமே கண்டத் தானம்
எண்ணமுறுஞ் சுழுத்தியிரு தயமாந் தானம்
இதமான துரியமது நாபி காணே.

தீவினையென்றால் பாபத்தைத்தான் கூறுவார்கள். மேலும் புனிதமான அவஸ்தை ஐந்தினை ஈண்டு கூறுவோம். அவையாவன,

சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம் எனப்படும். அவையாவன, சாக்கிரம் மேல் லலாடத் தானத்திலும், சொப்பனம் கண்டத்தானத்திலும், சுழுத்தி இருதய தானத்திலும், துரியம் நாபியென்ற தொப்பூள் தானத்திலும்.

29 காணப்பா மூலமதிற் றுரியா தீதங்
கலந்துநிற்கு மஞ்சோடே முப்பத் தாறுந்
தோணப்பா முன்மொழிந்த வறுப தோடே
சொன்னோமே தத்துவங்க டொண்ணூற் றாறால்
ஊணப்பா வுடலாச்சு உயிரு மாச்சு
உயிர்போனாற் பிணமாச்சு உயிர்போ முன்னே
பூணப்பா வாதபித்த சேற்று மத்தாற்
பூண்டெடுத்த தேகவளம் புகலுவேனே.

மூலாதாரத்திலே துரியாதீதமும் இவைகள் ஐந்துடன் முப்பத்தாறுடன் முன்சொன்ன அறுபதுடனே சொன்னோம் தத்துவங்கள் தொண்ணூற் ஆறால் காணுவது உடல் ஆனது, உயிர் ஆனது, உயிர் போனால் பிணமாச்சு, உயிர்போகும் முன்னே வாத, பித்த, சிலேத்துமத்தால் இந்த உடம்பினை பற்றிக் கொண்ட தேகவளத்தினை கூறுவோமாக.

30 தேகவளம் புகல்வதுகேள் தொண்ணூற் றாறு
தேர்ந்தவிர னீளமவர் கையி னாலே
வாகுபெறு மெண்ணான்கு உறுப்பு மாகும்
வளர்ரோமம் மூன்றுமரைக் கோடி யாகுந்
தோகையரே சிலேஷ்யந்தான் குணமூ வொன்பான்
தூக்குநிறை தேகமெட்டுத் துலாமே யாகும்
ஆகமெல்லாம் நரம்பதெழு பத்தி ரண்டு
ஆயிரமே செறியுமென வறிய லாமே.

தேகவளத்தினைப் புகழ்ந்து கூறுவது 96 விரல் நீளம் அவர் கையினாலே எண் நான்கு 12 உறுப்பும் ஆகும். ரோமம் $3\frac{1}{2}$ கோடி ஆகும். மயிலை யொத்த மங்கையரே சிலேஷ்யந்தான் குணம் 27 ஆகும். தேகத்தின் நிறை 8 துலாம் ஆகும். தேகமெல்லாம் 72000 நரம்புகளும் ஆகும்.





31 அறிவான நாடியெழு பத்தி ரண்டு
ஆயிரமா மொருநரம்பு பரியின் கேசம்
நெறிநேர்மை யாயிருக்கு மிடங்க டோறும்
நீட்டிமுடக் கிடயாக்கை போலே கட்டும்
பிரிவாக முடிச்சிடத்திற் றிரண்டு கூடிப்
பின்னல்கொண்டு பரந்தோங்கித் தேக மெல்லாஞ்
செறிவாக யிருக்குமதி லொருந ரம்பிற்
திரிதோடஞ் சேருமென்று தெளிந்து சொல்லே.

நாடி 72000ல் ஒரு நரம்பில் முடியும். நேர்மையாய் இருக்கும் இடங்கல்தோறும் நீட்டி முடக்குகிற ஆக்கையை போல்காட்டும். முடிச்சி இருக்கும் இடத்தில் இரண்டு கூடி பின்னலை கொண்டு பரந்து ஓங்கி தேகமெல்லாம் இருக்கும். அதிலே ஒரு நரம்பு. அதிலே மூன்று நாடிகளும் சேர்ந்து இருக்கும்.

32 சொல்லுகின்ற வாதபித்த சேத்துமந் தன்னிற்
சுகமான பித்தமது பூத நாடி
வெல்லுகின்ற குருநாடி யாத்தும நாடி
வெகுநோயை யகற்றிநலங் காட்டும் நாடி
பல்லுயிர்க்குந் தானாகி யிருந்த நாடி
பலகோடி யண்டமெல்லாம் நிறைந்த நாடி
அல்லலறு மாங்காரப் பிராண நாடி
அக்கினியைச் சேர்ந்தெழுந்த நாடி தானே.

மேலே சொல்லப்பட்ட வாத, பித்த, சேத்துமத்தில் பித்தநாடியே பூத நாடி ஆகும். ஜெயிக்கின்ற குருநாடியானது ஆத்மநாடி, வெகுநோயை அகற்றி நலம் காட்டும் நாடி, பல உயிர்களுக்கும் தானாகி இருந்தநாடி, பல கோடி அண்டமெல்லாம் நிறைந்து நிற்கும் நாடி, துன்பத்தை போக்கி நின்ற ஆங்காரப் பிராண நாடி, நெருப்பையொத்த பித்தம் சேர்ந்த நாடிதான் என்று சொல்லுவோம்.

33 நாடியென்றால் நாடியல்ல நரம்பிற் றானே
நலமாகத் துடிக்கின்ற துடிதா னல்ல
நாடியென்றால் வாதபித்த சிலேற்பன முமல்ல
நாடியெழு பத்திரா யிரந்தா னல்ல

நாடியென்றா லண்டபகி ரண்ட மெல்லாம்
நாடியெழு வகைத்தோற்றத் துள்ளாய் நின்ற
நாடியது வாராய்ந்து பார்த்தா ரானால்
நாடியுறும் பொருள்தெரிந்து நாடு வாரே.

நாடிகள் என்றால் நாடி அல்ல. நரம்புகளில் நலமாகத் துடிக்கின்ற துடியுமல்ல. நாடியென்றால் வாத பித்த கபமும் அல்ல, நாடி 72000மும் அல்ல, நாடியென்றால். இந்த அண்ட பகிரண்டமெல்லாம் ஏழுவகை நாடி தோற்றத்துள்ளாய் நின்று நாடியை ஆராய்ந்து பார்த்தோமானால் அதன் உருப்பொருளை கண்டு உணர்ந்துடுவீர்.

34 தெளிந்திட்ட நாடியது ஞாலம் போலே
சிறப்பாகப் புரிமூன்று மொன்றாய்க் கூடி
மொழிந்திட்ட வாதபித்த சிலேற்பன மென்று
முன்கையிற் பூண்டிருக்கு முறைமை யாக
நெளிந்திட்ட வாதமபா னத்தைப் பற்றி
நிறைந்திடையைச் சேர்ந்துந்திக் கீழே நின்று
குளிந்திட்ட மூலமதூ டெழுந்து காமக்
கொடியிடையைப் பற்றியெழுங் குணத்தைப் பாரே.

நாடியானது இந்த உலகம் போல சிறப்பாக நாடிகள் மூன்றும் சேர்ந்து (முப்புரிநூலைபோல) அதாவது பூநூலைப் போல கூடி சொல்லப்பட்ட வாத பித்த கபமென்று முன்கையில் இருப்பதை முறையாக அது நெளிவதைக் கண்டு பார்த்தால் வாத அபானத்தைப் பற்றியும், உந்திக் கீழும், மூலாதாரத்தை தொட்டு காமக்கொடியை பற்றி அதாவது மூலாதாரத்திலிருந்து ஆண் குறியை பற்றி நிற்கும்.

35 குணமான யெலும்பின்மேற் றொக்கை நாடிக்
குழாமெழு பத்தீரா யிரத்தைச் சேர்ந்து
நிணமான பொருத்திடமு ரோமக் காலும்
நிறைவாகி மாங்கிடமெல் லாம்ப ரந்து
மணமான விந்துவிட மலநீர்ப் பெய்ய
வழிகாட்டித் தேகமெல்லா முளைவு காட்டிக்
கணமான தசவாய்வுக் கிதமுங் காட்டிக்
கால்காட்டி வாதமெங்குங் கலக்குந் தானே.





இந்த நாடிகள் 72000ஐ சேர்ந்து பொருந்துமிடம் ரோம காலும், மேலும் நிறைவாகி எல்லாம் பரந்து விந்து விடவும், நீர் பெய்யவும், அதற்கு வழிகாட்டியுமாய், இவைகள் உண்டாவதற்கு வளர்ச்சி யையும் உண்டாக்கி தச வாயு என்ற பத்து வித வாய்வுகளுக்கும் இதம் அதாவது ஆரோக்கியமும் காட்டி வாதமானது எங்கும் கலந்து நிற்கும்.

36 தானான பித்தம்பின் கலையைப் பற்றித்
தயவான பிராணவாயு வதனைச் சேர்ந்து
ஊனான நீர்ப்பையி லணுகி மூலத்
துதித்தெழுந்த வக்கினியை யுறவு செய்து
மானேகே ளிருதயத்தி லிருப்பு மாகி
மயலாகி நினைவாகி மறப்பு மாகிக்
கோனான சிரந்தனிலே யிருப்பு மாகிக்
கொண்டுநின்ற பித்தநிலை கூறி னோமே.

பித்தமானது பின்கலையை பற்றி, அதனை பிராணவாயும் சேர்ந்து, சதையாலான நீர்ப்பையை அணுகியும், மூலாதாரத்தில் சேர்ந்து எழுந்து அக்கினியை உறவு செய்து, இருதயத்தில் தங்கி இருக்கும். பின்பு காதலாகி, நினைப்புமாகி, மறத்தலும் ஆகி, பிரதானமான தலையை பற்றித் தங்கி இருக்கும் என்ற பித்தத்தின் கூற்றினை கூறினோம்.

37 கூறினோஞ் சிலேற்பனமது சமான வாய்வைக்
குழுமியே சுழிமுனையைப் பற்றி விந்திற்
சீறியே சிரசிலாக் கினையைச் சேர்ந்து
சிங்குவையுண் ணாக்குநிண மச்சை இரத்தம்
மீறியே நீர்கோழை நரம்பெ லும்பில்
மேவியதோர் மூளைபெருங் குடலிற் கண்ணிற்
தேறியதோர் பொருத்திடங்க ளெல்லாஞ் சேர்ந்து
சிலேற்பனமது வீற்றிருக்குந் தடங்கண் டாயே.

சிலேத்பனமானது சமான வாய்வு கூட்டி சுழுமுனையை தொட்டு விந்தில் சேர்ந்து அதைக் கிளப்பிவிட்டு, தலையைப் பற்றி ஒருவிதமான பேரானந்தத்தை செய்து அதனுடன் சேர்ந்தும், சிங்குவை உண் ணாக்கும் மேலும், மச்சை, இரத்தம், நீர், கபம், நரம்பு, எலும்பு, மூளை, பெருங்குடல், கண் இந்த இடங்களை பொருந்தி இந்த இடங்களெல் லாம் சேர்ந்து சிலேற்பனம் குடிகொண்டு இருக்கும்.

38 கண்டாயோ வாதத்தா லெடுத்த தேகங்
கட்டிமையாய்த் தடித்திருக்குங் கருமை செம்மை
வண்டாருங் குழலாள்மே லற்ப வாசை
வாய்வுமிகும் போகமுறு மலச்சிக் கென்றல்
உண்டாலோ வற்பவுண்டி யெரிப்போ டுண்ணும்
உறுந்தாதுக் குறைச்சலுடம் புளைவு சீதம்
பண்டோர்கள் நூல்முறையே நடக்கல் போதம்
பாங்கான அறிவிசைத்தற் திண்ணந் தானே.

வாதத்தினால் எடுத்த தேகம் கருமை, செம்மையாக தடித்திருக்கும், பெண்கள் மீது அற்ப ஆசை, வாயு அதிகம் உண்டாக்கும், போகம் உரும், மலச்சிக்கல், உணவு செல்லாது. நல்ல முறையில் சாப்பாடு பிடிக்காது வயிறு எரிந்து கொண்டே இருக்கும். தாது குறைவுப்படும் உடல் உளைச்சல் கொள்ளும்.

39 திண்ணுமுறும் வாதத்திற் சேட்டுமஞ் சேர்ந்த
தேககுண மதகரிபோ னடக்குங் காயம்
வண்ணமுறத் தூலமதா முயர்ந்த மேனி
வார்த்தையிடி போலாகும் யோக முண்டாம்
நிண்ணயமாங் கலைக்கியான மறிவு முண்டாம்
நேரிழைமேல் மிகவாசை நிறமே செம்மை
உண்ணுவது புளிப்பெரிப்பு அதிகம் வேண்டும்
உயர்ந்தோருக் காசாரஞ் செய்யுந் தானே.

வாதத்திலே ஐயம் சேர்ந்தால் தேகக் குணம் மதங்கொண்ட யானையை போல் உடல் இருக்கும். உடல் நல்ல உயர்ந்து, கணத்து சுமாரான உடலை உடையதாகவும், வார்த்தைகளைப் பேசினார்கள் என்றால் இடியின் ஓசைப் போல் இருக்கும். நல்ல யோகம் உண்டாகும், 64 கலைக்கியானமும் உண்டாம். பெண்களின் மீது ஆசை உள்ளவர்களும், உணவின் சுவைகள் புளிப்பு, உரைப்பு அதிகமும், நல்லவர்களைக் கண்டால் ஆசாரமாய் இருக்கச் செய்யும்.

40 தானமுற வாதத்திற் பித்தஞ் சேர்ந்த
சரீரகுறி மெலிவுநிறங் கருப்பே யாகும்
ஈனமுறப் பொய்யுடனே மெய்யுஞ் சொல்லும்
எரிப்புடனே துவர்பதிக முண்ண வேண்டுங்





கானமருங் குழலாள்மேல் மிகுந்த வாசை
கடிந்தமொழி முன்கோபங் கசடா முள்ளம்
ஆனவுட னெடிதலது குறுக லாகும்
அறிவுகுறைந் திருக்குமென வறிய லாமே.

வாதத்தில் பித்தம் சேர்ந்தால் சரீரமெலிவு, கருப்பு நிறம், பொய்யும், மெய்யும் கலந்து பேசுவர், காரமுடன் துவர்ப்பு அதிகம் உணவில் வேண்டும். பெண் ஆசை அதிகம் உடையவர், முன்கோபம், வார்த்தை கடினம், அழுக்கு உள்ளம், அறிவோ மிகவும் குறைந்திருக்கும்.

41 அறிவான பித்தத்தா லெடுத்த தேகம்
அறமெலிவு நிறம்வெள்ளை யறிவை யோடு
பிறியாத சுகலீலை யற்ப வுண்டி
பெரும்புளிப்போ டுணவுகொள்ளற் பெரியோர்தம்மைக்
குறியாக வுபசாரம் பண்ணல் புத்திக்
குழம்பிப்பின் றேறல்கலைக் கியான போதம்
நெறியாகக் கற்றறிவு சொல்லல் வீரம்
நிலைப்புமதி யிளக்கமதி யுறவு மாமே.

பித்தத்தினால் ஆனதேகம் மெலிந்தவுடலும், வெண்மையான நிறமும், விரைவாய் நடக்கும் நாடியும், அற்பவுண்டியும், பிரியாத சுக லீலைகளும் மிக்க புளிப்பான உணவு கொள்ளுதலும், பெரியோர் களை உபசரிப்பதும், மெய், பொய், அறிவதற்காக பல நூல்களை ஆராய்தலும், திடமும், தீர்க்கமும், கடினமாயுள்ள காரியாதிகளைச் சாதித்தலும், இளமையில் நரையும், கடைக்கண் சிவப்பாகவும், சொற்கள் அமிர்தமாகவும், உடல் உஷ்ணமாகவும் உள்ள குணம், குறி செயல்களுடன் இருக்கும்.

42 உறவான பித்தத்தில் வாதஞ் சேர்ந்து
உறத்தெழுந்த தேகம்பொது நிறமே யாகும்
நிறைவான குணங்கிருபை புகழ்ச்சி வீரம்
நெறிநேர்மை சுகிகுளிர்ச்சி யோகம் ஞானம்
மறைவான கெவுனம்நற் கெந்தம் வேண்டும்
வாய்ஞான மதிகபுத்தி குயில்போல் வார்த்தை
துறவான வுடல்வரட்சி பசிபொ றாமை
சூடெரிப்புப் புளிப்பதிக முண்ணுஞ் சொல்லே.

பித்தத்தில் வாதம் சேர்ந்து பெலமாக எழுந்து நின்றால் தேகம் பொது நிறத்தை அடையும் (பலவண்ணம்). குணங்கள், கிருபை, புகழ்ச்சி, வீரம், நெறி, நேர்மை, சுகி குளிர்ச்சி, யோகம், ஞானம், கனவு, கந்தம், வாய்யினால் ஞானம் அதிகபுத்தி, குயில் போல் வார்த்தை உடலெல்லாம் வரட்சி பசி பொறாமை, சூடு, காரம், புளிப்பு அதிக முண்ணுதலும் சொல்ல வேண்டும்.

43 சொல்லுகின்ற பித்தமதிற் சேத்துமஞ் சேர்ந்த
சொரூபமது செண்பகப்பூ நிறமே யாகும்
வல்லியர்மேல் மிகவாசை புளிப்பினிப் புண்ணும்
வாக்குநயங் குரலோசை மனத்திட மேயாம்
நல்லறிவு கற்குமுதி யோரைப் பேணும்
நடுநிலையே சொல்லுமதி யோக முண்டாம்
பல்லுயிர்க்குந் தானிரங்கிக் கிருபை செய்யும்
பாங்கான தருமமிகுந் திருக்குந் தானே.

பித்தத்தில் சிலேத்துமம் சேர்ந்தால் உடல் செண்பகப்பூ நிறத்தை அடையும், பெண்ணாசை, புளிப்பு, இனிப்பு, உண்ணுதலும், வார்த்தை நல்ல மாதிரி பேச்சு வருதலும், மனது ஆழ்ந்து செயல்படும். நல்ல அறிவு, கற்றல், வயோதிகரை உபசரித்தலும், நடு நிலையே வகிக்கும், சொல்லும் அறிவு யோகமும், எல்லா உயிர் இனங்களுக்கும் உதவி செய்வதும், தான தருமம் அதிகம் செய்வதும் ஆகும்.

44 தானான சிலேற்பனத்தா லெழுந்த தேகந்
தணிந்திருக்கு மனம்பிலக்குஞ் சரீரம் வியர்க்கும்
மானார்மேல் மயலாகுஞ் சிவந்த மேனி
வார்த்தையிடி போலாகும் யோக முண்டாம்
ஆனாலும் பொய்யதைமெய் யாயு ரைக்கும்
அறப்பசிக்குந் தித்திப்போ டுண்ணுங் கைகால்
ஊனாகக் கசிந்திருக்குங் காசங் கக்கல்
உண்டாகு மென்றுமுன்னோ ருரைத்த வாறே.

சிலேத்துமதேகம், உடல் தணிந்தும், மனம் பலமாகவும், வியர்வை யோடு கூடிய உடலும், பெண்களிடம் ஆசை படுதலும், சிவந்த மேனியும், அழுத்தம் திருத்தமான வார்த்தையும், இலட்சுமி கடாட்சம்





உண்டான யோகமும், பொய்யை உண்மையென்னும் தன்மையும், நல்ல பசியும், இனிப்பு உணவில் பிரியமும், கை கால்களில் ஒரு வித கசிவும், இருமலும், கக்கும் வியாதியும் ஏற்படும்.

45 வாறான சிலேற்பனத்திற் பித்தஞ் சேர்ந்தால்
வளர்கோரோ சனைநிறமா மேனிதானும்
வீறான புளிப்பினிப்பு வுண்ண வேண்டும்
மெய்ரோமஞ் சிவப்புவெடி குரலே யாகும்
பேறான சத்தியமொழி பொய்சொல் லாமை
பிறபலனாம் யோகமுண்டாம் பேதை யோடு
கூறாக மயல்விளைக்கும் புகழ்ச்சி வீரங்
கொண்டுமனத் திடத்தனெனக் குறிக்க லாமே.

ஐயத்தில் பித்தம் சேர்ந்தால் கோரோசனை நிறமேனி, புளிப்பு இனிப்பு உண்ணவேண்டும், உடம்பு, முடி இவைகள் சிகப்பு நிறம், பேசும்வார்த்தை வெடிக்கும் தன்மை கொண்டும், சத்தியவான் பொய்யே கூறாதவர்களாகவும், பிறகூறு யோக பலன் கொண்டவர்ளாயும், பெண்களோடு சாகசம் புரிபவனும், புகழ்ச்சி, வீரம் கொண்ட மனத்திடமானவன்.

46 குறிக்கின்ற சிலேற்பனத்தில் வாதம் பற்றிக்
கொண்டெழுந்த தேகமது தூல காயம்
பிறிக்கின்ற வுடல்கருமை செம்மை யாகும்
பெருத்தகுட லுண்டிபுளிப் பெரிப்போ டுண்ணல்
மறிக்கின்ற பெண்ணாசை வீரம் யோகம்
வாழ்க்கைவித ரணவித்தை மறைநூ லாய்தல்
நெறிகொண்ட பெரியோரைச் சேர்த லன்பு
நேசமுறுஞ் சிலேற்பனத்தில் வாத மாமே.

கபத்துடன் வாதம் சேர்ந்தால் தேகமானது பருமனாகவும், கருமை, செம்மை நிறம் கொண்டவனாயும், பெருத்த குடலமைப்பையும் புளிப்பும், காரமும் அதிக முண்ணுதலானவனும், பெண்ணாசை உடையவனும், வீரமும், யோகமும் வாழ்க்கையில் உதாரண குணமுள்ள விதத்தையும், வேதங்களை ஆராய்ச்சி பண்ணுதலும், பெரியவர் களிடம் அன்புடன் மனம் வைத்து பழகுதலும் ஆம்.

47 வாதமெனும் நாடியது தோன்றிற் சீதம்
மந்தமொடு வயிற்பொருமற் றிரட்சை வாய்வு
சீதமுறுங் கிராணிமகோ தரம்நீ ராமை
திரள்வாய்வு சூலைகடுத்து இடுப்பு ளைச்சல்
நீதமுறுங் கிருமிகுன்ம மண்ட வாதம்
நிலையுநீர்க் கிரிச்சனமாம் தந்து மேகம்
பேதமுறு முதரபிணி மூல ரோகம்
பேசவெகு பிணிகளுக்கும் பொருள தாமே.

வாத நாடியானது உண்டானால் சீதம், மந்தம், பொருமல், வாய்வு, கிராணிக் கழிச்சல் சீதம் விழும். மகோதரம், நீராமை, சூலை, இடுப்பு உளைச்சல், வயிற்றில் கிருமி, குன்மம், அண்ட வாதம், மூத்திரக் கிரிச் சனம், தந்து மேகம், மூலரோகம் முதலியனவுமாம்.

48 பொருளான வாதத்திற் பித்தஞ் சேர்ந்தாற்
பொருந்திவருங் குணங்களுஷ்ண வாய்வு சக்தி
செறியாமை புளித்தேப்பம் பொருமல் நீரிற்
சிவப்புமலம் பிடித்தலுறுந் தாது நட்டங்
கருவான தேகமதி லுளைச்சற் சோம்பல்
கைகால்க டரிப்புநாக் கசக்கு மன்னம்
பரிவாகஊண்குறைதலு ருசிகே டாதற்
பலநோயும் வருத்திவிக்கும் பாங்கு தானே.

வாதத்தில் பித்தம் கூடினால் உஷ்ணவாயு, சக்தி செரியாமை, புளித்த ஏப்பம், பொருமல், மூத்திரம் சிகப்பு வண்ணமும், மலமானது சிக்கலும், தாது நட்டமும், உடலில் உளைச்சலும், சோம்பல், கை கால் அரிப்பு, நாக்கின் ருசி கசக்கும், சாப்பாடு குறைத்து உண்டும், ருசி கெட்டும், பல நோய்களையும் உண்டுபண்ணும்.

49 பாங்கான வாதத்திற் சேத்தும நாடி
பரிசித்தாற் றிமிர்மேவு முளைச்ச லாகுந்
தீங்கான யிருமலுடன் சன்னி தோடஞ்
சேர்ந்தவிடம் வெடிசூலை யிருத்து ரோகம்
வாங்காத யீளையுமந் தார காசம்
. வலியுடனே புறவீச்சுள் வீச்சு வீக்கம்
ஆங்காணுஞ் சுரமுடனே சுவாச காசம்
உண்டாகும் வெகுநோய்க்கு முறுதி தானே.





வாதத்தில் கபமானது சேர்ந்தால் உடல் திமிர் அதிகமாகும், உளைச்சலாகும், இருமல், சன்னி, தோஷம், வெடிசூலை, ஈளை மந்தார காசம், வலியுடன் புறவீச்சு, வீக்கம், காய்ச்சலோடு சுவாசகாசம் இவைகளை உண்டாக்கும்.

50 உறுதியுள்ள பித்தமது தோன்றில் வெப்பு
உட்ணவாய் வத்திசுர மதிசா ரங்கள்
மறதியுடன் கிறுகிறுப்புப் பைத்திய ரோகம்
வளர்சோகை யழலெரிவு காந்தல் கைப்பு
இருதயத்திற் கலக்கமது மறப்பு தாகம்
எழுங்கனவு பேயணையு மயக்க மூர்ச்சை
சிறிதுபெரும் பாடுரத்தப் பிரமே கங்கள்
சேர்ந்துவெகு பிணிபலவுஞ் சிறக்குந் தானே.

பித்தநாடி அதிகமானால்வெப்பு, உஷ்ணவாய்வு, அஸ்திசுரம் (எலும்பைப் பற்றியது) அதிசாரங்கள் (வயிற்றுப் போக்கு) மிகமறதி, கிறுகிறுப்பு, மனம் பேதலித்தல், சோகை, உடல் எரிவு, காந்தல், கைப்பு, இருதய கலக்கம், தாகம், கனவு, பேய்கள் கனவு, மயக்கம், மூர்ச்சை, பெரும்பாடு (மாதவிடாய் காலத்தில் அதிக உதிரப் போக்கு) மூத்திரத்தில் இரத்தமும், சீழும் ஆகிய உபத்திரவத்தைக் கொடுக்கும்.

51 சிறப்பான பித்தத்தில் வாத நாடி
சேரிலுறுந் தாதுநட்ட முதர பீடை
உறைப்பாகச் செரியாமை குன்மஞ் சூலை
உற்றசுரங் கிராணிவயிற் றிரைச்சல் மந்தம்
அறைப்பான வோங்காரப் புறநீர்க் கோவை
ஆயாசங் கிறுக்கோடு மயக்க மூர்ச்சை
முறைக்காய்வு விடவீக்க மூல வாய்வு
முரடான நோய்பலவு முடுகும் பண்பே.

பித்தத்தில் வாதநாடியானால் தாதுநட்டம், உதிரபீடை, செரியாமை குன்மம் (Peptic ulcer and case trople) சூலை, சுரம், கிராணி, வயிற்றிரைச்சல், மந்தம், புறநீர்க்கோவை, ஆயாசம், கிறுக்கு, மயக்கம், மூர்ச்சை, முறைசுரம், விஷத்தினால் வீக்கம், மூலவாய்வு, முதலானவற்றை செய்யும்.

52 பண்பான பித்தத்திற் சேத்துமங் கூடிப்
பரிசித்தா லத்திசுர மிளைப்பு ஈளை
கண்காது நாவுமுக மலநீர் மஞ்சள்
கனவயிறு பொருமல்மஞ் சணோய் கண்ணோய்
உண்போது மறுத்தலிரத் தவிப்புரு திபித்தம்
உளமாந்தை பீனிசமு முரத்த வீக்கம்
நண்பான காமாலை சோகை வெப்பு
நணுகிவந்து பலபிணியு நாடுந் தானே.

பித்தத்தில் ஐயமானால் அஸ்திசுரம், இளைப்பு, ஈளை, கண், காது, நாக்கு, முகம், மலம், மூத்திரம், எல்லாமே மஞ்சள் வண்ணம், வயிறு கனமாக பொருமல், மஞ்சள் காமாலை, உணவை வெறுத்தல், இரத்த விப்புருதி, பித்தம், உளமாந்தை பீனிசம், (Sinus trople) வீக்கமும், காமாலை, சோகை, வெப்பு முதலானவற்றை உண்டு பண்ணும்.

53 தானமுள்ள சேத்துமந்தா னிளகில் வெப்பு
சயமிரும லீளைமந் தார காசம்
ஈனமுறுஞ் சன்னிவிட தோடம் விக்கல்
இருத்துரோ கங்கரப்பான் விரண தோடம்
மானனையீர் சூலைதிரள் வாய்வு வீக்கம்
வருஞ்சத்தி சுவாசம்நெஞ் சடைப்புத் தூக்கம்
ஏனமுறுங் காமாலை சோகை பாண்டு
எழுசுரங்கள் பலதிற்கு மிடமுண் டாமே.

சிலேத்துமநாடி அணுகினால் வெப்பு, சயம், இருமல், இளைப்பு, ஈளை, மந்தார காசம், சன்னி, விஷதோஷம், விக்கல், கிறுக்கு தலையுடைய ரோகம், கரப்பான், இரணதோஷம், சூலை, திரள் வாய்வு வீக்கம், சத்தி சுவாசம், நெஞ்சடைப்பு, தூக்கம், காமாலை, சோகை, பாண்டு, ஏழுவிதமான காய்ச்சல்கள் உண்டாக்கும்.

54 இடமான சேத்துமத்திற் பித்த நாடி
எழுந்தணுகில் விடமுடனே வீக்க முண்டாந்
திடமான குளிர்காய்ச்சல் மஞ்ச ணோவு
தேகமதி லுளைச்சலிளைப் பிருமல் வாந்தி





விடமான நெஞ்சடைப்பு சுவாசம் விக்கல்
வெகுதாகம் நாவரட்சி பாண்டு ரோகந்
தடமான குவளைரத்த விப்புரு தியோடு
சார்ந்தணுகும் பலநோய்க்குந் தடங்கண் டாயே.

கபநாடியில் பித்தநாடி கலந்து நிற்கில் விஷமுடன் வீக்கம், குளிர்க்காய்ச்சல், மஞ்சள்காமாலை, தேகத்தில் உளைச்சல், இளைப்பு, இருமல், வாந்தி, நெஞ்சடைப்பு, சுவாசம், விக்கல், வெகுதாகம், நாவரட்சை, பாண்டு ரோகம், இரத்தவிப்புருதி முதலானவைகளை உண்டுபண்ணும்.

55 கண்டாயோ சிலேற்பனத்தில் வாத நாடி
கலந்திடுகில் வயிற்பொருமற் கனத்த வீக்கம்
உண்டாலோ ஓங்காரஞ் சத்தி விக்கல்
உறுதிரட்சை வாய்வுவலி சன்னி தோடம்
விண்டாலோ யிளைப்பிருமற் சோகை பாண்டு
விடபாகம் விடசூலை பக்க வாதந்
திண்டாடும் நாசிகா பீடங் கக்கல்
சிரநோய்கள் பலதும்வந்து சிறக்குந் தானே.

ஐயத்தில் வாதம் கூடினல், வயிற்றுப்பொருமல், கனத்த வீக்கம், சத்தி விக்கல், திரட்சை, வாய்வு வலி, சன்னிதோஷம், இளைப்பு இருமல், சோகை, பாண்டு, விஷ சூலை, பக்கவாதம், நாசிகா பீடம். கக்கல், தலை நோய்கள் பல விதம் வந்துசேரும்.

56 சிறப்பான வாதத்தி லுட்ணந் தானே
சேர்ந்திடுகி லதிசார முளைச்சல் வாய்வு
உறப்பான பொருமலோ டக்கினி மந்தம்
உண்டாகும் நீர்சுறப்புப் பிரமே கங்கள்
புறப்பாடு பதகரிநீர்க் கரப்ப னிரத்தப்
பிரமியமும் பெரும்பாடு புறநீர்க் கோவை
அறப்பான வாய்ச்சூலை சேத்தும கோபம்
ஆனபல பிணிகள்வந் தடறுந் தானே.

வாதத்தில் உஷ்ணம் சேர்ந்திடில் அதிசாரம், உளைச்சல், வாய்வு, பொருமல், அக்னிமந்தம், நீர்சுருக்கு, பிரமேகங்கள், நீர் கரப்பான் இரத்த பிரமேகம், பெரும்பாடு, புறநீர்க்கோவை வாய்ச்சூலை, கோபம் என பல பிணிகளும் சம்பவிக்கும்.

57 அடருகின்ற வாதத்தில் வாய்வு வந்து
அணுகினால் வலுவீச்சுத் திமிர்வி யாதி
தொடருகின்ற வானந்தவாய் வுபக்கச் சூலை
தொடைகுறுக்கு விலாப்பிடரி துடியாம் நெஞ்சிற்
படருகின்ற நரம்பிசிப்பு யிடங்க டோறும்
பரந்துகுத்திக் கொழுத்துநெஞ் செகுத்து மாகும்
இடருறவே சீதமுண்டாங் கபம்பெந் திக்கும்
இதனாலே பலபிணிவந் திருக்கும் பாரே.

வாதத்தில் வாய்வு கூடினுல் திமிர்வியாதி, வலுவீச்சு, ஆனந்த வாய்வு, பக்கச்சூலை, தொடை குறுக்கு, விலா, பிடரி துடிக்குமாம். நெஞ்சில் திருகுகின்ற நரம்பு இசிப்பும், இடங்கல் எல்லாம், துருத்தி கொழுத்து நெஞ்சை இருத்துமாகும். சீதமுண்டாம், கபம் இதனுல் பல பிணிகளும் உண்டாகும்.

58 இருக்குமந்த வாதத்திற் சீதஞ் சேர்ந்தா
லிளைப்பிருமல் விடசன்னி தோடம் வீச்சு
மறுக்கின்ற குளிர்காய்ச்சல் விரண தோடம்
வாந்திபொருத் திடமுளைவு மயக்கஞ் சோர்வு
ஒருக்கின்ற மலபெந்தம் பொருமல் வீக்கம்
உள்வீச்சுச் சூலையொடு பாண்டு ரோகந்
தருக்கின்ற தனுர்வாதம் பக்க வாதஞ்
சார்ந்துவெகு பிணிபலவுந் தழைக்கும் பாரே.

வாதத்தில் கபம் சேர்ந்தால் இளைப்பு இருமல், விஷசன்னிதோஷம், வீச்சு, குளிர்க்காய்ச்சல், வாந்தி, உளைவு, மயக்கம், சோர்வு, மலபந்தம், பொருமல், வீக்கம், உள்வீச்சு, சூலை, பாண்டு ரோகம், தனுர்வாதம், பக்கவாதம் இன்னும் அநேகவியாதிகள் உண்டாக்கும்.

59 தழைப்பான பித்தத்தி லுட்ணங் கொண்டாற்
சயமத்தி சுரம்வெதுப்பு சத்தி குன்மங்
களைப்பாகிப் பொருத்துளை வதிசா ரங்கள்
கடுப்புடனே வயிற்றுவலி மூல வாய்வு
இளைப்பாகி யூண்மறுத்தல் நாக்க சப்பு
ஈரல்வலிகன வுடனேசங் கார தோடம்
வளைப்பான பயித்தியநோ யெரிவு தாகம்
வந்தணுகிற் பலபிணிக்கும் வகைய தாமே.





பித்தத்தில் உஷ்ணம் சேர்ந்தால் க்ஷயம், அத்திசுரம், சத்திகுன்மம், பொருந்துளைவு அதிசாரங்கள், வயிற்றுவலி, மூலவாய்வு, அன்னம் செல்லாமை, நாவுகசப்பு, கனவு, சங்காதோஷம், ஈரல்வலி, பயித்திய நோய், யெரிவு, தாகம். இவ்வாருக பல பிணிகளும் வந்து துன்பத்தைக் கொடுக்கும்.

60 வகையான பித்தத்தில் வாய்வு கூடி
வசமானால் வலிகுன்மஞ் சூலை வாய்வு
பகையான வாந்திவிக்க லருவ ருப்புப்
பயித்தியங்கள் செறியாமை புளித்த யேப்பம்
தகையாத யீரல்வலி நெஞ்சு நோவு
தலைகிறுக்கு மசதியாந் தாது நட்டந்
தொகைமூல வாய்வுற்றா லுட்ணஞ்சோகை
தொடர்ந்துவரும் பலபிணிக்குந் தொனிப்புத் தானே.

தலை கிறுகிறுப்பு பித்தத்தில் வாய்வு சேர்ந்திடில் குன்மம். சூலை, வாய்வு, வாந்தி விக்கல், அருவறுப்பு, பயித்தியங்கள், செறியாமை, புளித்த ஏப்பம், ஈரல்வலி, நெஞ்சு எரிச்சல், தலை கிறுகிறுப்பு, அசதி, தாது நட்டம், சோகை முதலியன வந்து தொந்தரவு கொடுக்கும்.

61 தொனிப்பான பித்தத்திற் சீதங் கூடித்
தொந்தித்தாற் பசிமந்த மிரைச்சல் வாய்வு
இனிப்பான கபம்வாய்வு வாத கோபம்
எழும்மூலக் கடுப்புடனே யிருமல் சத்தி
பனிப்பான குளிர்காய்ச்சல் விசயா ரூடம்
பாண்டுடனே காமாலை சோகை வீக்கம்
கனிப்பான நாக்குவழு வழுப்புத் தோடங்
கலந்துவரும் பிணிபலவுங் கதிக்குந் தானே.

பித்தத்தில் கபம் சேர்ந்ததானுல் பசிமந்தம், இரைச்சல், வாய்வு, இனிப்பு கலந்த கபம், வாய்வு, வாத, கோபம், மூலக்கடுப்பு, இருமல், குளிர் காய்ச்சல், பாண்டு, சோகை, காமாலை, வீக்கம், நாக்கு வழுவழுப்பு, இவைகள் வந்து அணுகும்.

62 கதிப்பான சேத்துமத்தி லுட்ணங் கூடிற்
கலந்தகுணஞ் சயமிருமற் சுவாச காசம்
மதிப்பான குவளைரத்த விப்புருதி யோடு
வளர்நாசி காபீட மிருத்து ரோகங்

கொதிப்பான சிங்குவையின் ரோகம் நெட்டி
கொட்டாவி விக்கல்மந் தார காசந்
துதிப்பான வாய்வத்திக் காய்வு ரத்தந்
தோன்றும்வெகு பிணிபலதுந் தொந்திப் பாமே.

கபத்தில் உஷ்ணம் சேர்ந்து இருக்குமானால் சயம், இருமல், சுவாச காசம், ரத்தவிப்புருதி, நாசிகாபீடம், இருத்துரோகம், சிங்குவையின் ரோகம், நெட்டி, கொட்டாவி, விக்கல், மந்தாரகாசம், வாய் வத்தி காய்வு, இரத்தம் தோன்றும் இவையாவும் வந்து சேருமாம்.

63 தொந்தித்த சிலேற்பனத்தில் வாய்வு கூடித்
தொடர்ந்தகுன்மம் நெஞ்சடைப்பு சுவாச காசம்
வந்தித்த குரல்தனிலே யுறுத்த லீளை
வழுவழுப்பு நீரூரல் மலத்திற் சீதம்
வெந்தித்தல் கொழுத்தல்குத் துத்திமிர் வியாதி
வீச்சுடனே வலியெட்டு திரட்சை பாண்டு
அந்தித்த கிறுகிறுப்பு மயக்கம் விக்கல்
ஆனபல பிணிகள்வந் தடையுந் தானே.

ஐயத்தில் வாய்வு வந்து தொந்தமானால் குன்மம், நெஞ்சடைப்பு, சுவாசகாசம், குரல் உறுத்தல்,, ஈளை, நாவு வழுவழுப்பு, நீரூரல், மலத்தில் சீதம், வெந்தித்தல், தொழுத்தல், குத்துத்திமிர், வீச்சு, வலி, எட்டுவிதமான திரட்சை நோய், பாண்டு, கிறுகிறுப்பு, மயக்கம், விக்கல் ஆகிய பல பிணிகளும் வந்து சம்பவிக்கும்.

64 அடைவான சேத்துமத்திற் சீதம் பற்றி
அணுகினாற் சுவாசமடைப் பிளைப்பு மூர்ச்சை
திடமான வாயாச மயக்கம் வேர்வை
சேர்ந்தவிக்கல் சன்னிவிட தோடம் வீச்சு
இடமான வயிற்பொருமற் குளிர்தல் நடுக்கல்
இளைத்த சுரமோங்காரம் பெருத்த வீக்கந்
தடமான அவகுறி வந்தணுகு மென்று
சார்ந்தகுறு முனிக்குரைத்த தயவு தானே.

கபத்துடன் கபமதிகமானல் சுவாசம் அடைப்பு, இளைப்பு, மூர்ச்சை, ஆயாசம், மயக்கம், வியர்வை, விக்கல், சன்னி விஷ தோஷம், வீச்சு, வயிற்று பொருமல், குளிர்தல், நடுக்கல், சுரம், ஆங்காரம், தொடர்ச்சியாய் வரும்.





65 தயவான திரிதோட மூன்றுங் கூடித்
தானெழுந்தாற் சன்னியவ குணமே யாகும்
பயமாக மூவருமே பதுங்கி னாலும்
பலிபடாச் சன்னியது பதனம் பாரு
மயமான சேத்துமத்திற் பித்த மானால்
வாதத்திற் சேற்றுமம்வ லுக்கொண் டாலும்
நயமாகப் பிணிதீர வெகுநாட் செல்லும்
நாடிவகுப் புணர்ந்துகுண மறிய லாமே.

மூன்று நாடிகளும் சேர்ந்து எழுந்தால் சன்னி ஆகாத குறி ஆகும். மூன்று நாடிகளும் பதுங்கினுலும், சன்னியின் குறியே ஆகும். சேத்துமத்தில் பித்தம் சேர்ந்தாலும், வாதத்தில் கபம் வலுத்து நின்றாலும், பிணிகள் தீர அதிக நாட்கள் ஆகும்.

66 அறிவான வாதத்திற் பித்தமா னாலும்
அடர்ந்தபித்த மதில்வாத மணுகி னாலுஞ்
செறிவாகப் பித்தத்திற் கபமா னாலுஞ்
சேர்ந்தகபம் பித்தத்திற் சிதறி னாலும்
பிறிவாக நோய்தீருங் கபத்தில் வாதம்
பிரண்டாலும் வாதமையிற் பலங்கொண் டாலுங்
குறியாக மருந்துபல விதஞ்செய் தாலுங்
கூண்டவுடல் விட்டுவுயிர் கடக்குந் தானே.

வாதத்தில் பித்தம் ஆனுலும், பித்தத்தில் வாதமானுலும், பித்தத்தில் கபம் சேர்ந்தாலும், கபத்துடனே பித்தம் சிதறிஓடினுலும், எந்த ஒரு நோய் பற்றினுலும் அது தீரும். கபத்தில் வாதம் தன் நினைப்பில் இருந்து பிரண்டாலும், வாத நாடியானது ஐயத்துடன் பலங்கொண்டு ஓடினுலும், எந்தவிதம் குறியாக மருந்து கொடுத்தாலும் உயிர் உடலைவிட்டுப் பிரிந்துவிடும்.

67 கடகமுதற் றுலாம்வரையும் வாத மாகுங்
கனவாடி யைப்பசியு மதுவே யாகும்
விடமீன. முதல்மிதுனம் பித்த மாகும்
விரைகமழ்பங் குனியானி யதுவே யாகுந்

திடமான விருட்சிகமுதற் கும்பஞ் சேட்டுமஞ்
சேர்ந்தகார்த் திகைமாசி யதுவே யாகும்
நடைமேவும் வாதபித்த சேத்துமந் தானும்
நலமாக மாதமுதல் நடக்குங் காணே.

கடகராசி முதல் துலாராசி வரையில் வாதமாகும். ஆடி, ஐப்பசியும் அதுவே ஆகும், மீன முதல் மிதுனம் வரை பித்தமாகும். பங்குனி மாதமும், ஆனி மாதமும் அதுவே ஆகும். விருட்சிகராசி முதல் கும்பராசி வரை சிலேற்பனம் ஆகும். கார்த்திகை, மாசியும் அதுவே ஆகும். இந்த காலங்களில் மூன்று நாடிகளின் நடைகளும் நலமாக நடக்கும்.

68 காணுகின்ற வுதயத்திற் பித்தம் பத்து
கடும்பகலே சேற்றுமந்தான் கடிகை பத்து
பூணுகின்ற சாய்பொழுது வாதம் பத்து
பொழுதடைந்தால் முதற்சிலேற்பனங் கடிகை பத்து
வேணுமந்த நடுச்சாமம் பித்தம் பத்து
வெய்யவனு முதிக்குமுன்னே வாதம் பத்து
ஆணுவத்தால் வாதபித்த சேத்துமந் தானும்
அறிவாகத் தினந்தினமும் நடக்குந் தானே.

சூரியன் உதயம் தொட்டு பத்து நாழிகை வரை பித்தத்தின் நாடியும், மதியத்தில் சிலேத்பனமும் பத்து நாழிகை வரையும், மாலை வேளையில் வாதமது பத்து நாழிகை வரையில் நடக்கும். மாலை கடந்தவுடன் தொடர்ந்து முதல் பத்து நாழிகை வரை சிலேற்பனமும் நடுநிசி வரை பித்தம், கதிரவன் உதயத்துள் பத்து நாழிகை வரை வாதம். இந்த விதமாக இந்த மூன்று நாடிகளும் தினம், தினம் நடக்கும்.

69 தானவனு மமைத்தபடி வயது நூறு
சகலருக்கு மிளமையிலே சிலேற்பன மாகும்
ஆனநடு வயதுபித்த மப்பால் வாதம்
ஐயாறு மூவாண்டு மாதம் நான்கு
ஈனமற மூவருமே மூன்று பங்காய்
இப்படியே நடந்துவரு மிறையோன் முன்னாள்
ஏனமுற வமைத்தவண்ண மாண்டு மாதம்
இயல்வான நாட்கள் தப்பி மரிப்ப தாமே.





அனுபவத்தில் கண்டபடி சகலருக்கும் வயது நூறு. இந்த வயதுக்கு முன்னால் (இளமையில்) சிலேற்பனம், நடுவயதில் பித்தம், அதன் மேல் வாதம் என்ற நடப்பிற்கு ஒரு நாடியின் கால அளவை 33 வருடம் 4 மாதம் என வகுத்து வைத்துள்ளனர். இதிலே நேர்மை பட மூன்று நாடிகளும் கடவுளின் முன்பாக நடந்து முன்சொன்ன காலக்கிரமத்தில் ஆளை தீர்த்துவிடும், மரித்துவிடும்.

70 மரிப்பான நூறாண்டிற் சேற்றும பித்த
வாதமிவை மூன்றுபங்காய் நடக்கும்போது
தரிப்பான வாண்டுபதி னொன்று மாதந்
தானொன்று நாள்பத்துஞ் சமைத்த தாகும்
இருப்பான சிலேற்பனத்தி லரைக்கால் வாதம்
இயல்வான பித்தத்தி லரைக்கா லையங்
கதிப்பான வாதத்திற் காலையும் பித்துங்
கலந்துமுறை முறையாய்க்கை யாளும் பாங்கே.

முன்கூறிய வண்ணம் மூன்று நாடிகளும் நூறு ஆண்டை பங்குவைத்து நடக்கும்போது 11 வருடம், 1 மாதம், 10 நாட்களுக்கும். சமர்த்தாக அம்மூவர் இருப்பார்கள். இதிலே சிலேற்பனத்தில் 1/8 வாதம், பித்தத்தில் 1/8 பங்கு ஐயம், வாதத்தில் 1/4 பங்கு பித்தம் கலந்து முறை முறையாக நடக்கும்.

71 பாங்காக யிப்படியே நடக்கும் போது
பழவினையாற் கர்மத்தாற் பலநோய் தன்னாற்
தீங்கான பூதமஞ்சாற் பிதாமா தாக்கள்
செய்வினையாற் குத்திரதோ டத்தாற் பேயால்
ஆங்காணுங் கருவிகளா லூறு பாடால்
ஆனபல விடத்தாலும் நஞ்சி னாலும்
ஓங்காணு முயிரழிவாம் விதியோடு சேர்ந்து
உறுமாத மாண்டுநாட் குறையுந் தானே.

இந்த விதமாக இப்படி நடந்து கொண்டு வருகையில் கர்மத்தால் முன் பிறவி ஊழ்வினையால் பலப்பல நோய்களாலும், பஞ்ச பூதத்தினாலும், அவரவர் மாதா, பிதாக்கள் செய்த வினையாலும் பொய் தோஷத் தினுலும், ஆயுதங்களின் விகர்ப்பத்தினாலும், பேயால், பல விதமான விஷங்களினாலும், நஞ்சுகளினாலும்,

உயிருக்கு அழிவு விதியோடு சேர்ந்து, முன் கூறிய ஆண்டு, தினங்கள் குறையும் அதாவது ஆயுள் குறையும்.

72 குறையாத திரிமோகர் நெடுநோ யாளர்
குதிரைமத கரியேறி நடந்தோ ரெய்தோர்
நிறையாக வுண்டெழுந்தோர் லகிரி கொண்டோர்
நீர்ப்பாடு நீரிழிவு குறைநோ வுற்றோர்
முறையாக வீக்கமுள்ளோ ரத்திக் காய்வால்
முசித்திளைத்தோர் பயமுற்றோர் விடம ணைந்தோர்
அறையாம லோட்டமுற்றோர் கிலேசங் கொண்டோர்
அறப்பசித்தோ ரிவர்க்குத்தா துறமாட் டாதே.

தீராத வியாதிகளை உடைய நோயாளர், காமக்குரோதம் கொண்டோன், குதிரை சவாரி, யானையின் மீதோ, நடந்தோ சென்றவர்களுக்கும், வயிறு புடைக்க உணவு அருந்திய பின்னரும், லாகிரி வஸ்துக்களை உண்டவர்களுக்கும் (அதாவது குடி, வெற்றிலைபாக்கு புகையிலை, பொடி, புகைத்தல் போன்றவற்றையே லாகிரி வஸ்து என்று கூறுவார்கள்) நீரழிவு, குறைநோய், முறையான வீக்கம் உள்ளவர்கள், அஸ்திக் காய்வால் இளைத்தோர்கள், பயந்தவர்கள், விஷத்தினை சார்ந்தோர், மனக்கிலேசங்கொண்டோர், நல்ல பசியை உடையவர் இவர்களுக்கு நாடி நடையை சோதிக்குமிடத்தது நாடி புலப்படாது.

73 மாட்டாத கிழமான பெண்கள் கெற்பம்
மாதவிடா யானோர்க்கும் பெரும்பாட் டோர்க்குந்
தேட்டாசை யதிகவிசா ரத்தி னோர்க்குந் (டோர்க்கும்
தேய்த்தெண்ணெய் முழுகினோர்க்குஞ் சினங்கொண்
வாட்டாசை கன்னியர்மேற் பராக்காய் னோக்கும்
வயசாக இளைத்தோர்க்கு மதங்கொண் டோர்க்கும்
மோட்டாத்து மாக்களுக்குந் தாது பார்த்தால்
முறையாக நோய்களுந்தான் வகுப்பு றாதே.

வயோதிகமான பெண்கள் கற்பமடைந்தபோதும், மாதவிடாய் ஆனவர்களுக்கும், பெரும்பாடு கண்டோருக்கும், ஆசை அதிகமுள்ளவர்களுக்கும், விசாரம் பிடித்தோருக்கும், எண்ணெய் ஸ்நானம்செய்தவர்களுக்கும், கோபங் கொண்டவர்களுக்கும்,





கன்னியர்களை வட்டமிட்டு காணும் மனிதர்களுக்கும், வயதான இளைத்தோருக்கும் பயித்தியம் கொண்டவர்களுக்கும், திடகாத்திரமான பெரும் உடல் அமைப்புக் கொண்ட முரடர்களுக்கும் நாடி பார்த்தால் நோய்கள் காணும் அளவுக்கு நாடி தென்படாது.

74 வகுப்பாகக் கைமுறிந்தோர் சோகை கொண்டோர்
மாண்டபிணந் தனைத்தொட்டோர் வாந்தி விக்கல்
தொகுப்பாக வேயெடுத்தோர் விரத முற்றோர்
சோனைமழை தனில்நனைந்தோர் சுரசங் கீதம்
பகும்பாக வேபடித்தோர் களறி சுற்றிப்
பலநாட்டி யங்கள்மிக வாடி யெய்த்தோர்
மிகுப்பான சுவாசமதை யடக்கி னோர்க்கும்
விரைவாக நாடியது விலகுந் தானே.

முன் சொன்னதுடன் கை முறிந்த பேர், சோகை கண்ட பேர், பிரேதத்தினை தொட்டவர், வாந்திவிக்கல் உடன் தொடனாக தொடர்ந்து எடுத்தவர், விரத காலத்தைப் பின் பற்றினவர், தூறலில் நனைந்தோர், சங்கீதம் படித்தோர், சுற்றி, சுற்றி நாட்டியங்கள் ஆடினவர்கள், சுவாசத்தை அடக்கினவர் ஆகியோர்க்கு வெகு சீக்கிரமாக நாடி கள் தோன்றாதாம்.

75 தானான பிரமேகம் வாத சூலை
சார்வான நீரிழிவு குன்ம ரோகம்
ஆனாலோ சையோகஞ் சன்னி தோடம்
அடுத்தவிடங் காமாலை பாண்டு சோகை
மானேகேள் கபரோகந் திரள் வியாதி
மஞ்சள்நோய் குலைநோவு பைத்ய ரோகம்
ஊனாகும் வருமிடத்தி லதிசா ரங்கள்
உண்டானா லசாத்தியமா முறுதி தானே.

பிரமேகம், வாதசூலை, நீரிழிவு, குன்மம், பெண்கள் மீது விருப்பம், சன்னி, தோஷம், காமாலை, பாண்டு, சோகை, கபரோகங்கள், திரள்வியாதி, மஞ்சள் காமாலை, சூலைநோவு, பைத்திய ரோகங்கள் இவைகள் வந்த பின் அதிசாரங்கள் வந்துற்றால் அசாத்தியமென்று தீராது என்று கூறுவார்.

76 உறுதிகொண்ட வலுவீச்சுச் சன்னிதோடம்
உரத்தசுரம் விடஞ்சோகை யுள்ளு ரோகம்
அறுதியுள்ள கிராணியதி சாரங் குன்மம்
அத்திசுரம் வயிற்றுளைவு பிரமே கங்கள்
பொறுதியுள்ள நீரிழிவு சுவாச காசம்
பொருந்துஞ்சயங் கணையிளைப்பு மிருத்து ரோகஞ்
சுறுதியுட னின்னோயில் வீக்கம் வந்து
தோன்றிடுகில் மரணமென்று தொகுத்துச் சொல்லே.

வலுவீச்சு, சன்னிதோஷம், கடுமையான காய்ச்சல், விஷம், சோகை, கிராணி அதிசாரங்கள், குன்மம், அத்திசுரம், வயிற்றுளைவு, பிரமேகங்கள், நீரிழிவு, சுவாசகாசம், க்ஷயம், கணையிளைப்பு, மிருத்துரோகம் இந்த வித ரோகங்களில் வீக்கம் வந்துற்றால் அவைகள் தீராது. மரணம் சம்பவிக்கும்.

77 தொகுத்திட்ட நீரிழிவு மேகஞ் சூலை
சுரம்வீச்சு சன்னிவலி தோடம் மாந்தம்
மிகுத்திட்ட கிராணியதி சாரம் வாதம்
விடபாக மகோதரமும் பாண்டு சோகை
வகுத்திட்ட பெரும்பாடு மஞ்சள் நோவு
வாய்வுரத்த பித்தமுடன் பலநோ வுக்கும்
பகுத்திட்ட யிளைப்புடனே சுவாசம் விக்கல்
பற்றினால் மரணமென்று பரிந்துச் சொல்லே.

நீரிழிவு, மேகம், சூலை, சுரம், வீச்சு, சன்னி தோடம், மாந்தம், கிராணி, அதிசாரங்கள், வாதம், விஷபாகம், மகோதரம், பாண்டு, சோகை, பெரும்பாடு, மஞ்சள்காமாலை, வாய்வு, இரத்தபித்தமுடன் இவைகளில் இளைப்புடன் சுவாசம், விக்கல் பற்றினால் மரணம் என்று உரைக்கலானார்கள்.

78 சொல்லுகின்ற விடபாகம் வீக்கஞ் சோகை
சூலைவளர் வாதம்நீ ரிழிவு மேகம்
அல்லல்படு மிளைப்பிருமற் சுவாச காசம்
அதிகசயஞ் சன்னிவிட மாந்த தோடம்





வெல்லுகின்ற கபரோகந் திரள் வியாதி
வீறான குன்மமத்தி சுரங்கா மாலை
வல்லமையா லிந்நோயில் வயிற்று ளைச்சல்
வந்தணுகில் மரணமென்று வசனிப் பாயே.

விஷபாகம், வீக்கஞ்சோகை, சூலை, வாதம், நீரிழிவு, மேகம், இளைப்பு இருமல், சுவாசகாசம், க்ஷயம், சன்னி, விஷ மாந்தம், தோஷம், கபம், திரள்வியாதி, குன்மத்தில் சுரம், காமாலை இந்தவித நோய்களில் வயிற்றுளைச்சல் வந்தால் மரணம் என்று கூறுவர்.

79 வசமான நீரிழிவு பிளவை யீளை
மந்தார காசஞ்சய மிரத்த பித்தம்
நிசமான வுளைச்சலதி சாரஞ் சன்னி
நீண்டசுர தோடரத்தப் பிரமே கங்கள்
விசமான வீக்கநீர் கெற்பச் சூலை
வீச்சுவலி பெரும்பாடு மூல வாய்வு
துசமான விந்நோயிற் கொழுத்த வாய்வு
தோன்றிடுகில் மரணமென்று துதிப்ப தாமே.

நீரிழிவு, பிளவை, யீளை, மந்தாரகாசம், க்ஷயம், இரத்த பிததம், உளைச்சல் அதிசாரம், சன்னி, நாளான சுரம், ரத்த பிரமேகங்கள், வீக்க நீர், கெற்பச்சூலை, வீச்சு வலி, பெரும்பாடு, மூல வாய்வு, இந்த விதமான நோய்களில் கொழுமையான வாய்வு பற்றிடில் மரணம் என்று சொல்லுவர்.

80 துதிப்பான மேகத்தில் நீரிழிவு மாகா
தோன்றியநீ ரிழிவுதனில் வாத மாகா
மதிப்பான வாதத்தில் வயிறுளைச் சலாகா
வருமுளைச்சல் தனில்வாய்வு கொழுத்த லாகா
கொதிப்பான வாய்வதிலே விக்க லாகா
கூண்டவிக்கல் தனிலிளைப்புக் கொள்ள லாகா
கதிப்பான இளைப்பதிலே சுவாசம் வந்து
கலந்தாலும் மரணமென்று கருத லாமே.

மேகரோகத்தில் நீரிழிவு நோய் ஆகாது, நீரிழிவுதனில் வாதமாகாது. வாதத்தில் வயிற்றுளைச்சல் ஆகாது. அந்த

வயிற்றுக்கடுப்பிலே கொழுமையான வாய்வு பற்றலாகாது. வாய்வுதனில் விக்கல் கூடாது. விக்கலில் இளைப்பும் கூடாது. இளைப்பு வந்ததுடன் சுவாசம் வந்துகலக்கக் கூடாது. அப்படி ஆனால் மரணம் நிச்சயமே.

81 கருதுகின்ற மந்தமதிற் சுரமு மாகா
கலந்தசுரந் தனில்மேகங் காண லாகா
மருவுகின்ற மேகமதில் வீக்க மாகா
வரும்வீக்கந் தனில்வயிறு பொரும லாகா
பொருமலிலே கபகோபம் புரள லாகா
பொருந்துங்கபந் தனிலிளைப்புப் பூண லாகா
வெருவியதோ ரிளைப்பதிலே சுவாசம் விக்கல்
மேவிடுகில் மரணமென்று விள்ள லாமே.

மந்தத்தில் சுரமும், அந்த சுரத்தில் மேகமும், மேகத்தில் வீக்கமும், வீக்கத்தில் வயிற்றுப் பொருமலும், பொரும்லிலே கபமும், கபத்திலே இளைப்பும், இளைப்பிலே சுவாசம், விக்கல் வந்துற்ருல் மரணம் என்று கூறுவர்.

82 விள்ளுகின்ற மேகமதில் வாய்வு மாகா
விரைவான வாய்வதிலே திரட்சை யாகா
கொள்ளுகின்ற திரட்சையதில் வீக்க மாகா
கூறியதோர் வீக்கமதிற் கபமு மாகா
துள்ளுகின்ற கபமதிலே சயமு மாகா
தோன்றுஞ்சயந் தனிலிரத்தந் தோன்ற லாகா
தள்ளுகின்ற ரத்தமதிற் சுவாசம் விக்கல்
சார்ந்தாலும் மரண மென்று சாற்ற லாமே.

மேகத்தில் வாய்வு ஆகாது, வாய்வானதில் திரட்சையும், திரட்சையதில் வீக்கமும், வீக்கமதில் கபமும், கபத்திலே க்ஷயமும், க்ஷயந்தனிலே, இரத்தமும், இரத்தமதில் சுவாசம் விக்கல் சார்ந்தால் மரணம் என்று கூறுவர்.

83 சாற்றுவது நீரிழிவிற் பிளவை யாகா
சலமான பிளவையிலே தாக மாகா
ஏற்றமுள்ள தாகமதி லனலு மாகா
இயல்பான அனலதிலே மயக்க மாகா





சீற்றமுறு மயக்கமதில் வியர்வை யாகா
சீர்கேடாம் வியர்வையிலே கபமு மாகா
பூற்றிருவே கபந்தனிலே விக்கல் வந்து
பொருந்திடுகில் மரணமென்று புகல லாமே.

நீரிழிவு தன்னில் பிளவையும், பிளவையிலே தாகமும், தாகமதில் அனலும், அனலதிலே மயக்கமும், மயக்கமதில் வியர்வையும், வியர்வையிலே கபமும், கபந்தனிலே விக்கலும் வந்துற்றால் மரணம் என்று கூறலாமே.

84 புகல்வதுகே ளுட்ணமதில் வாய்வு மாகா
பொருந்தியதோர் வாய்வதிலே குன்ம மாகா
தகமைபெருங் குன்மமதிற் பேதி யாகா
தாங்காத பேதியிலே பொரும லாகா
அகதமுறும் பொருமலிலே கபமு மாகா
ஆங்காரக் கபத்தில்விக் கலனுக லாகா
சுகமறவே விகலிலே மயக்கம் வந்து
தோன்றிடுகில் மரணம்வந்து தொடருந் தானே.

உஷ்ணமதில் வாய்வும், வாய்வதிலே குன்மமும், குன்மமதில் பேதியும், பேதியிலே பொருமலும், பொருமலிலே கபமும், கபந்தனிலே விக்கலும், விக்கலிலே மயக்கம் தொடர்ந்து வந்தால் மரணம் தான் என்று கூறுவர்.

85 தொடரான பித்தமதிற் சோகை யாகா
சோகையிலே வாய்வெழுந்து தொந்திப் பாகா
இடரான வாய்வதிலே பாண்டு மாகா
எழிற்பாண்டு தனில்வயிற்றுக் கடுப்பு மாகா
திடமான கடுப்பதிலே சீத மாகா
சீதமதி லெழுந்துகபஞ் சேர லாகா
தடமான கபந்தனிலே மயக்கம் வீக்கம்
சார்ந்திடுகில் மரணமென்று தயவாய்ச் சொல்லே.

பித்தத்தில் சோகையும், சோகைதனிலே வாய்வும், வாய்வதிலே பாண்டும், பாண்டுதனிலே வயிற்றுக்கடுப்பும், வயிற்றுக்கடுப்பிலே சீதமும், சீதத்தில் கபமும், கபத்திலே மயக்கம், வீக்கம் இவைகள் வந்துற்ருல் மரணம் என்று கூறுவர்.

86 தயவான சுரந்தனிலே விடமு மாகா
சார்ந்தவிடந் தனிற்தோடந் தழைக்க லாகா
பயமான தோடமதிற் சன்னி யாகா
பாங்கான சன்னியிலே கபமு மாகா
இயல்வான கபந்தனிலே வாய்விள கலாகா
இளகியதோர் வாய்வதிலே இளைப்பு மாகா
கயமான இளைப்பதிலே சுவாசம் விக்கற்
கலந்தாலும் மரணமென்று கழற லாமே.

சுரத்திலே விஷமும், விஷத்திலே தோடமும், தோடத்திலே சன்னியும், சன்னியிலே கபமும், கபந்தனில் வாய்வும், வாய்வினிலே இளைப்பும், இளைப்பதிலே சுவாசமும், விக்கலும் கலந்து வந்தால் மரணம் நிச்சயம்.

87 கழறியதோ ரத்தியிலே காய்வு மாகா
காய்வதிலே வாய்வுவந்து கலக்க லாகா
உளறியதோர் வாய்வதிலே வுளைச்ச லாகா
உண்டான வுளைச்சலிலே வீக்க மாகா
குழறியதோர் வீக்கமதிற் சீத மாகா
குளிர்சீதந் தனிற்கபமேற் கொள்ள லாகா
இளகியதோர் கபந்தனிலே மயக்கம் விக்கல்
எழுந்தாலும் மரணமென் றிசைக்க லாமே.

அத்தியிலே காய்வும், காய்வுதனில் வாய்வும், வாய்வதினில் உளைச்சலும், உளைச்சலில் வீக்கமும், வீக்கத்தில் சீதமும், சீதமதில் கபமும், கபந்தனிலே மயக்கம், விக்கல் வந்துற்றால் மரணம் நிச்சயம்.

88 இசைந்தபடி சுரந்தனிலே யிளைப்பு மாகா
இளைப்பான கபத்தினிலே விடமு மாகா
உசந்தவிடந் தனிற்மயக்கம் வாய்வு மாகா
உண்டான மயக்கமதிற் சுவாச மாகா
அசைந்திளகுஞ் சுவாசமதில் வியர்வை யாகா
ஆனகபவியர் வையிலே குளிர்ச்சி யாகா
வசைந்திளகுங் குளிர்ச்சியிலே மயக்கம் விக்கல்
வந்தாலும் மரணமென்று வணங்கிச் சொல்லே.

சுரத்திலே இளைப்பும், இளைப்பதிலே கபமும், விஷமும், விஷந்தனிலே மயக்கம், வாய்வும், மயக்கமதில் சுவாசமும்,





சுவாசத்திலே வியர்வையும், வியர்வையிலே குளிர்ச்சியும், குளிர்ச்சியிலே மயக்கம் விக்கலும் வந்துற்றால் மரணம் நிச்சயம்.

89 வணங்கியதோர் வாதபித்த சிலேத்துமந் தன்னில்
வலுவான பித்தமது தளர்ச்சி யாகிப்
பிணங்கியதோர் வாதமொடு சேத்துமஞ் சேர்ந்து
பின்னல்கொண் டிளைப்பாகி யுடல் வெளுத்து
இணங்கியதோர் கைகாலுங் குளிர்ந்து நெஞ்சும்
எடுத்தடித்துக் கண்மூக்கில் நீரும் பாய்ந்து
உணங்கியநா வரண்டுபல்லுங் கருத்து வாந்தி
உண்டாகில் மரணமென்றே வுரைக்க லாமே.

வாத பித்த சிலேத்மத்தில் பித்தமது தளர்ச்சியானாலும், வாதத்தில் சிலேத்துமம் சேர்ந்து பின்னல் கொண்டு இளைப்பு உண்டாகி உடல் வெளுத்து, கையும் காலும் குளிர்ந்து, கண் மூக்கில் நீரும், நாவு வரண்டு பல் கருத்து, வாந்தி உண்டானால் மரணம் என்று கூறுக.

90 உரையான பித்தமொடு வாதந் தாழ்ந்து
உற்றசிலேற் பனமிளகிச் சத்தி விக்கல்
விரைவாக வேயெடுத்து நெஞ்ச டைத்து
மேலிளப்பாய்க் கிறுகிறுத்து வியர்வை யாகி
வரையாக விழிசொருகி மூக்க டைத்து
வாயாலே சுவாசம்மிகக் கண்டு தானாற்
துரையாக யிருந்தாலும் மரணம் வந்து
சுருக்காக மரிப்பதுவுந் திண்ணந் தானே.

பித்தத்தில் வாதம் தாழ்ந்து சிலேற்பனத்தில் விக்கல் எடுத்து நெஞ்சடைத்து மூச்சு மேல்வாங்கி, கிறுகிறுப்பு உண்டாகி, வியர்வை ஆகி, விழி சொருகி, மூக்கடைத்து வாயால் சுவாசம் விட்டும் இருந்தால் மரணம் நிச்சயம்.

91 திண்ணமுட னீரடைத்து மலமுஞ் சிக்கிச்
சிறந்ததொரு நீர்பாய்ந்து சீத மேவி
வண்ணமுள்ள கைகாலும் பெருத்து வீங்கி
வயிற்பொருமி நாவரண்டு வாந்தி யாகி

எண்ணமுற மூச்சடைத்து விக்க லாகி
இளைப்பதிலே மயக்கமதாய்த் தேக மெல்லாந்
தண்ணெனவே குளிர்ந்திடுகில் மரணம் வந்து
சாருவது முறுதியென்று சமைந்துச் சொல்லே.

நீரை அடைத்து (சிறுநீர்) மலமும் கட்டி, நீர் பாய்ந்து சீதமும் ஏகி, கைகால் பெருத்து வீங்கி, வயிர் பொருமி, நாவு வரண்டு வாந்தி ஆகி, மூச்சடைத்து, விக்கலை உண்டாக்கி, இளைப்பதில் மயக்கம் உண்டாகி தேகமெல்லாம் குளிர்ந்து இருந்தால் மரணம் என்று வழுத்தினர் பெரியோர்கள்.

92 சமைந்தவன்னந் தனைவெறுத்து விக்க லாகிச்
சடமான வயிற்பொருமி சரீரஞ் சோர்ந்து
இமைந்தவுடற் றான்புடைத்து விலாவி ரண்டும்
எடுத்தடித்து வுடல்குளிர்ந்து சத்தி யாகி
குமைந்தசிரங் கண்பதிந்து செவியு மூக்குங்
குளிர்ந்துதா னுறமதனி லெரித்துக் கூசி
அமைந்தவுடல் வேர்வையானால் மரணம் வந்து
ஆனவுட லழியுமென வறிவாய்ச் சொல்லே.

வெந்தசோறு வெறுக்கப்பட்டு, விக்கல் உண்டாகி, வயிறு பொருமல், சரீரம் சோர்வு, விலா இரண்டும் புடைத்து இருக்கும். உடல் குளிர்ந்து, தலை, கண் உள்ளமுத்தி, காது மூக்கு குளிர்ந்தும், வேர்வையும் உண்டானால் மரணம் என்று கூறு.

93 அறிவான கண்டமதில நோவு மாகி
அம்பகமே சிவந்து அழல் தானே மேவி
குறியான அண்டமுடன் முகமும் வீங்கிக்
குறுக்குஅடி வயிறுபுறங் கைகாற் கனத்து
வெறியாகித் தாகமுமாய் மயக்க மாகி
விக்கலுடன் மேல்மூச்சாய் வியர்வை யாகி
மறிவான நயனமது கூசிப் பார்க்கில்
மரணம்வரு மென்றுதிடன் வகுக்க லாமே.

கண்டத்தில் நோவும், உடல் உள் சிவந்து, அழல் எழுந்து, அண்டமுடன் முகமும் வீங்கி, வயிறு புறங்கை கால் கனத்து வெறி





பிடித்த மாதிரி, தாகமுடன், மயக்கமாகி, விக்கலுடன், மேல் மூச்சாய் வியர்வை உண்டாகி, கண் கூச்சலுடன் பார்வையும் இருந்தால் மரணம் என்று நூல் பெரியோர் கூறுவர்.

94 வகுப்பான நீர்மலமு மடைத்து விம்மி
வயிற்பொருமிக் கண்ணில்நீர் வடிந்து சோர்ந்து
தொகுப்பான தேகமெலாங் குளிர்ந்து கூசித்
தொண்டையிலே குருகுருப்பாய்த் தாக மாகிப்
பகுப்பான புறங்காலுங் கையும் வீங்கிப்
பரிதாப மிகவாகிப் பிரவே சித்து
விகுப்பான கையதனாற் சேட்டை செய்யில்
விரைவாக மரணமென்று விள்ள லாமே.

மலம், நீர், அடைத்து விம்மி வயிறு பொருமி கண்ணீர் வடிதலுடன் தேகமெல்லாம் குளிர்ந்து தொண்டையில் குருகுருப்புடன் தாகமானலும் மேல் கையும் காலும் வீங்கி பார்க்கவே பரிதாப நிலைய்ய அடைந்து கை ஜாடைகள் செய்தும் நோயாளி இருந்தார் எனில் மரணம் என்று கூறலாம்

95 விள்ளவே சிலேற்பனமது மூலத் துற்று
மேல்மூச்சாய் தானெடுத்துப் பிராண வாய்வைத்
துள்ளவே சேர்ந்துநெஞ் சடைப்பு மாகித்
தொண்டையிலே திரைபோலே யிரைத்து மோதி
மெள்ளவே கண்சிவந்து அருகே பார்த்து
மேனியெல்லாஞ் சோபமுமாய் வெளுத்துக் காட்டிக்
கள்ளவே குருவியர்வை வியர்த்த தானாற்
காலனுயிர் கவர்வதுவு முண்மை தானே.

சிலேத்பனம் மூலத்தை தொட்டு மேல் மூச்சு வாங்கி, பிராண வாய்வை அடைந்து, நெஞ்சடைப்பும் உண்டாகி, தொண்டையில் ஏதோ உணவு தங்கினமாதிரி அடைப்பு உண்டாகி, கண் சிவந்தும், மேனி எல்லாம் வெளுமை நிறம் ஆனுலும், லேசான வியர்வை வியர்த்தாலும் உயிர்போகும்.

96 உண்மையுட னடிவயிறு முதுகு வீங்கி
யுறுமூல வக்கினியுங் கேட தாகி
வண்மையுட னன்னமதை வெறுத்துக்காட்டி
வயிற்பொருமி மேன்மூச்சாய் வாந்தி யாகிப்
பெண்மயிலே தசநாடி குன்றி வாதம்
பித்தமது வொடுங்கிவளர் கபமே பொங்கி
திண்மையுடன் மூச்செடுக்கில் மரணம் வந்து
சேருமென முன்னோர்கள் தெளிந்த வாரே.

அடிவயிறும், முதுகும் வீங்கி, மூலாதாரம் அக்கினிபோல வெந்தும், சாப்பாட்டை ஒதுக்கியும், வயிர் பொருமியும், மூச்சு மேலே வந்தும், வாந்தியும், பத்து வித நாடிகளும் குன்றி போதலும், வாதம், பித்தம் ஒடுங்கியும், கபம், பொங்கி நின்றும், மூச்சும் உண்டானால் மரணம் என்று பெரியவர்கள் கூறுவர்.

97 தெளிவான வாதபித்த சேற்று மத்தாற்
சேர்ந்துவரும் பிணிநாலா யிரத்தி னோடு
வளிவாக நானூற்று நாற்பத்தெட்டு
வந்தணுகிற் றேகமதில் வலுவி யாதி
நெளிவாகப் பித்தமதி லுட்ண மிஞ்சில்
நிலைத்தபிணி யவிழ்தத்தாற் றீருந் தீரும்
பழிபாடாஞ் சேற்றுமமொடு வாதஞ் சேர்ந்தாற்
பலநோய்க்கும் மரணம்வந்து பற்றுந் தானே.

மூன்று நாடிகளினாலும், 4448 வியாதிகளும், தேகத்தில் வலுத்து பித்தத்தில் உஷ்ணம் மிஞ்சிடில் எந்த ஒரு வியாதியும் மருந்தினுல் தீரும். கபத்தோடு வாதம் சேர்ந்தால் பலப்பல நோய்க்கூட்டங்கள் அணுகி மரணம் வந்து அடையும்.

98 பற்றுநோய் தீரவென்றாற் தர்மம் வேண்டும்
பாங்கான குணம்வேண்டும் வணக்கம் வேண்டுஞ்
சித்திரமா யவிழ்தங்கள் செய்ய வேண்டுஞ்
செய்மருந்து சுத்திவேண்டும் பத்தியம் வேண்டும்
முத்திபெறும் வைத்தியன்மேற் கிருபை வேண்டும்
முன்னோர்கள் நூல் முறையே நடக்க வேண்டும்
பத்தியுட னிப்படியே நடந்த போர்க்குப்
பிணிதீரு மென்றுமனம் பொருந்திச் சொல்லே.





பிடித்த நோயானது தீர வேண்டும் என்றால் தர்மத்தை நிலை நாட்ட வேண்டும். நல்ல மாதிரியான குணம், மனம் வேண்டும், நல்ல வணக்கம் வேண்டும், வினோதமான முறையிலே மருந்துகளை செய்ய வேண்டும், செய்த மருந்து - சுத்தியும், பத்தியமும், வைத்தியன் பேரில் மிகுந்த நம்பிக்கையும், கிருபையும் முன்னோர்கள் நூலின்படி நடத்தலும் வேண்டும். பத்தியுடன் இப்படி நடந்த பேர்களுக்கு நோய்க் கூட்டங்கள் ஓடி ஒழியும் என்று பெரியோர்கள் கூறுவர்.

99 பொருந்தியதோர் சதகமொரு நூறுஞ் சொல்லிப்
புகழ்பெரிய நிகண்டுதொல் காப்பிய புராணம்
அருந்தவஞ்செய் காரிகைநன் னூலி லக்கியம்
இந்நூலா னவுரிச்சொல் நேமிநா தத்தோடு
வருந்துபன்னூற் பாட்டியலு மொழுத்துஞ் சொல்லும்
வரும்யாப்பு பொருத்தவிதி யலங்கா ரஞ்சொல்
திருந்தவடி யேனுரைத்தே னறிவுள் ளோர்க்குச்
சிறப்பாகக் கொள்வதுங்கள் சிறப்புத் தானே.

வைத்தியசதகம் நூறும் சொல்லி, பெரிய நிக்ண்டு, தொல்காப்பியம், புராணம், நன்னூல், இலக்கியம் இந்நூல் ஆவது உரிச்சொல், உண்டான சப்தத்துடன் வருத்தி பல நூல் பாட்டியலும், எழுத்தும் சொல்லும், இதில் வரும் யாப்பு, அலங்காரச்சொல், திருந்தி அடியேனுரைத்தது அறிவுள்ளோர்க்கு சிறப்பாகக் கொள்வதுதான் உங்கள் சிறப்பு ஆகும்.

100 சிறப்பாக வாராய்ந்து வாத பித்தஞ்
சேத்துமமுந் தொந்தமுடன் தீருந் தீரா
உறப்பானதத்து வத்தின் பஞ்ச பூதம்
உட்கிரிகை தசநாடி வாய்வு பேதம்
நறப்பாகத் தென்பொதிகை தன்னில் வாழும்
நன்முனிக்குக் குருபரன்றா னன்று சொன்னார்
அறப்பாக நினையாம லுணர்ந்த போர்க்கு
நம்புவிய லாதியோர் வாழ்வுண் டாமே.

நல்ல முறையில் ஆராய்வது வாத பித்தம் சிலேத்துமம் தொந்தத்துடன் தீரும். தீராததின் தத்துவத்தின் பஞ்சபூதம் உட்கிரிகை

தசநாடி வாய்வுபேதம். நறப்பாக பொதிகை மலை தன்னில் நன்முனி குருபரன் அகத்திய முனிவர் நின்று சொன்னார், அறத்தின் வாயிலாக உணர்ந்து நினைந்தபேர்க்கு இந்த உலகத்தில் முன்னோர்கள் கூறிய நல்ல வாழ்வை அடையலாம்.

101 உண்டான விந்நூலை யுணர்ந்த பேர்கள்
உலகுதனிற் பெரியோர்க ளாத்ம ஞானி
கொண்டாடும் வித்தைமதி புத்தி யுண்டாம்
குருதெரிசன மும்பெருகி ஞான முண்டாம்
வண்டாடும் பூமாது நிறைவாழ் வுண்டாம்
மகாமோட்ச சாயுட்சிய பதமே நல்கும்
பண்டோர்கள் நூன்முறையா லாய்ந்து சொன்னேன்
பாங்கான சதகமென்னும் நூலு முற்றே.

இந்த நூலினை உணர்ந்தவர்கள் இந்த உலகத்தில் பெரியோர்கள் ஆத்மஞானிகள் கொண்டாடும் விதத்தை மதி, புத்தி, ஞானம் இவைகள் உண்டாகும். குரு தரிசனமும், பெருகி ஞானமும் உண்டாகும். வண்டு ரீங்காரம் இடும் அந்த மலரை உடைய இலக்குமி ஆனவள் இருக்கும் வாழ்வை உண்டாக்கும். பெரிய பதவி சாயுட்சிய பதம் இன்னும் அதைவிட இன்னும் பெரிய பெரிய பதவி கிட்டும் 'பெரியவர்கள் ஆன பண்டையோர்கள் நூல் முறைகளை ஆராய்ந்து சொன்னேன்' என்றும் இந்த வைத்திய சதக நாடி முடிந்தது என்றும் கூறினர்.

